# அண்ணமலை அரசர்





C.P.&P.

வெள்ளையன் பதிப்புக் கழகம்

# அண்ணாமலை அரசர்

ஆசிரியர் :

லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார்

தமிழ்ப்பேராசிரியர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

வெளியிடுவோர் :

வெள்ளையன் பதிப்புக் கழகம்

கண்டனூர் : : இராமநாதபுரம் ஜில்லா



[விலை ரூபாய் ஒன்று

# முன்னுரை

"அன்ன சத்திரம் ஆயிரம் வைத்தலில் ஆங்கோர் ஏழைக்கு எழுத்தறிவித்தல் கோடி புண்ணியம்" என்ருர் பாரதியார். எழுத்தறிவித்தலே கோடி புண்ணிய மெனின், சற்றேறக் குறைய ஐம்பது லட்ச ரூபாய் வழங்கிப் பெரிய பல்கலைக் கழகம் நிறுவுதல் எவ்வளவு புண்ணியம்! அப்பெருந் தொகையையும் ஒருவரே மனம் உவந்து கொடுத்தாரெனின், அவர் எத்தகைய புண்ணிய வாளுய் இருத்தல் வேண்டும்! அப்புண்ணியப் பெருந் தகையாளர் யாவர்? அவரே, தமிழ்த் தாயின் தவப் புதல்வராய் வந்து, தமிழ் இசையை நிலை நிறுத்திய அறப் பெருஞ் செல்வர் டாக்டர் ராஜா சர். அண்ணு மலைச் செட்டியார். அவர் அமைத்ததே அண்ணுமலைப் பல்கலைக் கழகம். அக்கழகத்தை அமைத்ததுடன் நில்லாது அப்பெரியார் செய்துள்ள அறச் செயல்கள் பலவாகும். அவர்களின் முயற்சியும், உயர்ச்சியும், வள்ளன்மையும், பிற நற்பண்புகளும் இளைஞர் உள்ளங் களில் பதியத் தக்கவை; இளைஞர் வாழ்க்கைக்கு உறுதுணையானவை. ஆதலின், அப்பெரு வள்ளலது வரலாற்றை எழுத முன்வந்தேன். தமிழகம் தழைக்க, தமிழர் சிறக்க, தமிழ் இளைஞர், தமிழ் வள்ளலது வரலாறு கூறும் இந்நூலை ஊன்றிப் படித்துப் பயன் பெறுவார்களாக.

அண்ணுமலை நகர்<br>15-9-55

லெ. ப. கரு. இராமநாதன்

# உள்ளுறை

# 1. தோற்றுவாய்

“வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்”

என்னும் தமிழ் மறைக்கு ஏற்ப, அறவழியிற் பொருளீட்டித் தாமும் துய்த்துப் பிறர்க்கும் பல வழிகளில் உதவி, நல்வாழ்வு வாழ்பவர் இவ்வுலகில் மிகச் சிலரேயாவர். அவர்கள் ஊர் நடுவில் உள்ள பழு மரங்களுக்கு ஒப்பாவார்கள்; கல்வி, சுகாதாரம் என்னும் இரண்டும் மக்களுக்கு இரு கண்களைப் போன்றவை என்பதை நன்கறிவார்கள்; சுகாதாரத்தால் உடல் வளமும், கல்வியால் அறிவு வளமும் பெருகுதலை உணருவார்கள். இத்தகையோர், பூத உடல் அழியினும், தம் அறச் செயல்களால், புகழ் உடல் அழியப் பெறுதவர்கள். ஆதலின் இவர்கள் என்றும் இறவாத நிலையை அடைவார்கள். இந்நிலையே செல்வம் படைத்த மக்கள் பெறத்தக்க பேருகும்.

## தனவணிகர்

நமது நாட்டிலும் செல்வம் படைத்தவர் பலர் இருக்கின்றனர். அவருள் பெரும்பாலோர் பொது மக்கள் நலனைப் பற்றிய கருத்தே அற்றவராகக் காணப்படுகின்றனர்; பொது மக்களுக்கு ஏற்ற கல்வி நிலையங்களோ, மருத்துவச் சாலைகளோ ஏற்படுத்த அவர்கள் மனம் இசையவில்லை; தாமும் தம் மக்களுமே தாம் ஈட்டும் பொருளை நுகர வேண்டும் என்னும் கொள்கையினராய் இருக்கின்றனர். ஆயினும் விரிந்த உள்ளம் படைத்த

செல்வர் சிலரேனும் நம் நாட்டில் இருப்பது பாராட்டுதற்குரியது. அச்சிலருள் பெரும்பாலோர் தனவணிக மக்கள் ஆவர்.

## தனவணிகர் அறச்செயல்

தனவணிகர் அல்லது நகரத்தார் என்பவர், பாண்டிய நாட்டில் இராமநாதபுரம் மாவட்டத்திலும்-புதுக்கோட்டையையடுத்தும் உள்ள தொண்ணூற்ரூறு நகரங்களில் வாழ்ந்த பழங்குடி மரபினர். அவர்கள் இன்று ஏறத்தாழ எழுபத்தாறு நகரங்களில் வாழ்கின்றனர். "திரை கடல் ஓடியும் திரவியம் தேடு" என்பதற்கேற்பத் தனவணிகர், கடல் கடந்து பர்மா, மலேயா, இலங்கை முதலிய நாடுகளில், இருநூறு ஆண்டுகளாக வாணிகம் செய்தனர்; பெரும் பொருள் ஈட்டினர்; ஈட்டிய பொருளிற் பெரும் பகுதியை நாடெங்கும் உள்ள கோவில்களில் திருப்பணி செய்தல், கோவிலையடுத்துப் பூந்தோட்டங்களை உண்டாக்குதல், பூசை நடைபெற மானியம் விடுதல், துறவிகளுக்குத் திருமடங்கள் கட்டுதல், தேவாரப் பாடசாலைகளும், வேத ஆகமப் பாடசாலைகளும் அமைத்தல், பசுமடம் கட்டல், குளந் தொட்டல், அன்ன சாலைகள் நடத்துதல், மருத்துவச்சாலைகள் அமைத்தல், கல்விச் சாலைகள் நிறுவுதல் ஆகிய பல அறச் செயல்களில் செலவிட்டனர்.

## சிறந்த சமயத் தொண்டு

கி. பி. ஏழாம் நூற்ருண்டில், அப்பராலும் சம்பந்தராலும் பாடப்பெற்ற பழங் கோவில்கள், அழியத்தக்க மண்ணாலும் மரத்தாலும் ஆக்கப்

பட்டவை; அவை என்றும் அழியாமல் இருக்கப் பிற்காலச் சோழர்கள் அவற்றைக் கற்கோவில்க ளாக மாற்றினர். ஆயினும், காலப்போக்கில் அவை நிலை தளர்ந்தன; தேடுவார் அற்ற நிலையை அடைந்தன. அந்நிலையில் அவற்றிற்குத் திருப் பணி செய்யத் தொடங்கி, இலட்சக்கணக்கான ரூபாய்களைச் செலவிட்டுப் புதிய புதிய கற்கோவில் களாகக் காட்சியளிக்குமாறு செய்த பெருமை, தனவணிகருக்குச் சிறப்பாக உரியது. அவர்கள் துணிந்து, இத்திருப்பணியை மேற்கொண்டிரா விடில், பழைய கோவில்கள் பல, அழிந்துபட் டிருக்கும் என்பதில் ஐயமில்லை. அவர்கள் செய்த இச்சிறந்த சமயத் தொண்டினைத் தமிழகம் என்றும் மறவாது போற்றக் கடமைப்பட்டதாகும்.

## டாக்டர் ராஜா சர் அண்ணுமலைச் செட்டியார்

தனவணிகர் அறச் செயல்களுள் பல, சமயத்தை அடிப்படையாகக் கொண்டவை. ஆயி னும், ஆங்கில ஆட்சியில் உயர்தரக் கல்வி நாட்டில் பரவப் பரவ, அவர்களின் அறச் செயல், கல்வித் துறையிலும் சென்றது. அதன் பயனுகப் பல கல்வி நிலையங்கள் தோன்றி, நாட்டு மக்களுக்குக் கல்வித் தொண்டு செய்யலாயின. இங்ஙனம் வாழ் வாங்கு வாழத்தொடங்கிய தனவணிகருள், முடி மணிபோல் விளங்கிய ஒருவரே, உலகம் போற்றும் பல்கலைக் கழகம் கண்ட நம் டாக்டர் ராஜா சர் அண்ணுமலைச் செட்டியார் ஆவர். அப்பெரியாரது அரிய வரலாறு, செல்வர்க்கும், பிறர்க்கும் சிறந்த வழி காட்ட வல்லது. அவ்வரலாற்றை அடுத்து வரும் பகுதிகளில் காண்போம்.

# 2. முன்னோர் பெருமை

**மரபுவழி**

தனவணிகர் வாழ்ந்து வரும் நகரங்களுள் **கானாடுகாத்தான்** என்பதும் ஒன்று. அது பழைமையும் புதுமையும் பொலியும் நகரமாகும். அந்நகரத்தில் ஏறத்தாழ இருநூறு ஆண்டுகளுக்கு முன்னர் வெள்ளையன் செட்டியார் என்ற தன வணிகர் செல்வச் சிறப்புடன் வாழ்ந்துவந்தார். அவருக்குச் சாத்தப்ப செட்டியார் என்ற ஒரே மகனார் இருந்தார். அவருக்கு வெள்ளையன், அண்ணாமலை, இராமநாதன், சிதம்பரம் என நான்கு மக்கள் பிறந்தனர். அவருள், இராம நாதன் செட்டியாரின் தவ மைந்தரே, நம் ராஜா சர் அண்ணாமலைச் செட்டியாரின் தந்தையாரான **முத்தைய செட்டியார்** என்பவர்.

**முத்தைய செட்டியார் திருப்பணிகள்**

இவர் தம் வாழ்க்கைத் துணைவியாராகிய மீனாட்சியம்மையாருடன் இல்லறம் என்னும் நல் லறத்தை இனிது நடத்திவந்தார். இப்பெரியார் அன்பும் அறமும் உடையவர்; இவர் தில்லைக் கூத்தப்பிரானிடம் நீங்காத அன்புடையவர்; தமது தொழில் வருவாயிலிருந்து ஒரு பகுதியைக் கொண்டு, தில்லைப் பெருமான் கோவிலைப் புதுப் பித்தார்; சிற்சபையைப் பொற்சபையாக்கிக் கும்பாபிடேகம் செய்வித்தார்; கூத்தப் பெருமா னுக்கு இரவில் இரண்டாங் காலப் பாவாடைப் படைப்பிற்கு வேண்டுவன செய்தார்; அன்ன சத்திரத்தைச் சிறப்பாக நடத்தினார்; தேவாரப்

பாடசாலை அமைத்தார்; பெரிய பூந்தோட்டம் உண்டாக்கினர்; மேலும் திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் உள்ள கரூர்ச் சிவன் கோவிலைப் புதுப்பித்தார்; பாடசாலையும் பூந்தோட்டமும் அமைத்தார். "நற்றவா உனை நான் மறக்கினும் சொல்லும் நா நமச்சிவாயவே" என்று சுந்தரர் கூறியாங்கு, முத்தைய செட்டியாரது நா, எப்பொழுதும் திருவைந் தெழுத்துக்களை ஓதிக் கொண்டேயிருக்கும்.

**காசியில் சமயத் தொண்டு**

கி. பி. ஏழாம் நூற்றுண்டில் அப்பர் சுவாமிகள் திருக்கயிலையைக் காண விரும்பித் தமிழகத்தி லிருந்து நடந்து சென்றுர் என்று பெரிய புராணம் கூறுகிறது. அவரைப் போலவே முத்தைய செட்டி யாரும் நடந்து சென்று காசியைத் தரிசிக்க விரும் பினர்; அவ்வாறே காசியம்பதியை அடைந்து, விசுவநாதரைக் கண்டு ஆனந்தக் கண்ணீர் சொரியத் தரிசித்தார்; அப்புனித நகரில் நகரத் தார் பெயர் நிலைத்திருக்கத் தக்க முறையில் சிவத் தொண்டு செய்ய இவர் விழைந்தார்; தம் இனத் தவர் பலருடன் கூடி, **நாட்டுக் கோட்டை நகரத் தார் சத்திரம்** என்ற பெயருடன் ஒரு சத்திரத்தை அமைத்தார். கேதார கட்டத்தில், திருவண்ணு மலைப் பெருமானை எழுந்தருளச் செய்து, கோவில் எழுப்பி, அதனைத் திருப்பனந்தாள் ஆதீனத் தலை வரிடம் ஒப்படைத்தார்.

**மக்கட்பேறு**

முத்தைய செட்டியாருக்குப் பெண் மக்கள் மூவரும், சிதம்பரம், இராமசாமி, அருணுசலம்,

அண்ணுமலை என்ற ஆண்மக்கள் நால்வரும் பிறந்தனர். இவருள் அருணுசலம் என்பவர் இளமையிலேயே இவ்வுலக வாழ்வை நீத்தார்.

### சிதம்பரஞ் செட்டியார்

முத்தைய செட்டியாரின் மூத்த மைந்தரான சிதம்பரம் செட்டியார் செல்வாக்கு மிக்கவர்; தோற்றப் பொலிவுடையவர்; இவர் தஞ்சாவூருக்கும் காரைடுகாத்தானுக்கும் அஞ்சல் (தபால்) வரச் செய்தார்; காரைடுகாத்தானில் அஞ்சல் நிலையம் அமையச் செய்தார்; தம் இனத்தவர் வாழும் ஊர்களுக்குப் போய்வர ஒழுங்கான வழிகளை அமைத்தார்; சுருங்கக் கூறின், இவருடைய தொண்டு செட்டியார் நாட்டளவில் நின்றதென்னலாம்.

### திவான்பகதூர் இராமசாமிச் செட்டியார்

சிதம்பரம் செட்டியாரின் இளவலான இராமசாமிச் செட்டியார், கல்வி கேள்விகளிற் சிறந்தவர்; கூத்தப் பிரானிடம் பேரன்பு பூண்டு, தில்லைத் திரு நகரிலேயே வாழ்ந்து வந்தார்; இவர் 1908-ஆம் ஆண்டு முதல் 1916-ஆம் ஆண்டுவரை அந் நகராண்மைக் கழகத் தலைவராயிருந்தார்; சிதம்பரம் தாலூகா போர்டுத் தலைவராகவும் இருந்து, பொதுநலத் தொண்டுகள் பல செய்தார்; சாலைகளைப் புதுப்பித்தார்; நகரப் பொதுப் பணத்துடன், தமது இலட்சக் கணக்கான பொருளையும் செலவிட்டு, நகரத்தில் குழாய்களைப் பதித்துக் குழாய்த் தண்ணீர் அளித்த பெருமை, இப்பெரியாரையே சாரும். சிதம்பரத்தில் உள்ள முதியவர்கள் இன்றும் இவ்வுண்மையைக் கூறி, இராமசாமிச்

செட்டியாரை வாழ்த்துகின்றனர். இவர் 1915-ஆம் ஆண்டில், உயர்நிலைப் பள்ளி ஒன்றை அமைத்தார். அதுவே **இராமசாமிச் செட்டியார் உயர்நிலைப் பள்ளி** என்னும் பெயரோடு இப்பொழுதும் விளங்குகின்றது. அது, முப்பத்தைந்து ஆண்டுகளாகச் சிதம்பரம் மக்களுக்குக் கல்வி யளிக்கும் கலைப்பீடமாகத் திகழ்கின்றது. முத்தைய செட்டியார், சிதம்பரத்தில் சிவத் திருப்பணிகளைச் செய்து புகழ் பெற்றார்; அவர் தனையரான இராமசாமிச் செட்டியார், அந்நகரிலேயே மக்களுக்கு இன்றியமையாத நலன்களைச் செய்து அழியாப் புகழ் பெற்றார். இப்பெரியாருடைய பொது நலப் பணிகளைக் கண்டு மகிழ்ந்த சென்னை அரசாங்கம், இவருக்குத் **திவான் பகதூர்** என்னும் பட்டத்தை அளித்தது. தனவணிகர்களுக்குள் சென்னைச் சட்ட சபையில் உறுப்பினராய்த் திகழ்ந்த முதல் வரும் இவரேயாவர். இவர் 1918-இல் இறையடி சேர்ந்தார். இவர் மேலும் பல்லாண்டுகள் வாழ்ந்திருப்பின், பல அரிய நற்செயல்கள் செய்திருப்பார். ஆயினும் இவர் பிரிவால் உண்டான கவலையை அகற்றுவதுபோலப் **பொது நலப் பணி என்னும் வானில், அண்ணாமலை என்னும் சூரியன் சுடர்விட்டுத் தோன்றலாயிற்று.** அப்பெருந்தகையாரது வரலாற்றை இனிப் பார்ப்போம்.

# 3. இளமைப் பருவம்

## குழந்தைப் பருவம்

அண்ணுமலைச் செட்டியார் 1881-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 30-ஆம் நாள் வெள்ளிக்கிழமை மூல நட்சத்திரத்திற் பிறந்தார். சிறந்த சோதிடர்கள், சாதகம் கணித்து, '**ஆண் மூலம் அரசாளும்**' என்றனர். அவர்கள் வாக்குப் பலித்தது. அண்ணுமலைச் செட்டியார் '**செட்டிநாட்டு அரசர்**' ஆனுர் அல்லவா? இவர் இளமை முதலே கண் கவர் தோற்றம் உடையவர்; அறிவின் ஒளி வீசும் விழிகள் படைத்தவர்; பிறர்க்கு நன்மை புரியும் அன்புப் பார்வை பெற்றவர்; புன்னகை பூத்த முகப் பொலிவு கொண்டவர்; இவர் குறுநடை நடந்து, இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும், நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும் பெற்ருேரை மகிழ்வித்தார். கடைசிப் பிள்ளையாதலின் பெற்ருேர்கள் இவரைப் பெரிதும் பேணி வளர்க்கலாயினர்; இவருடைய மழலைச் சொற்களைக் கேட்டு மகிழ்ந்தனர்.

## கல்விப் பருவம்

முத்தைய செட்டியார், திருக்குறள், தேவாரம், திருவாசகம் இவற்றில் அறிவுடையவர். ஆதலின், அண்ணுமலைச் செட்டியார் சிறுவயது முதலே இம் மூன்று நூல்களையும் பற்றி ஓரளவு அறியலாஞர். தந்தையார் செய்துவந்த கோவில் திருப்பணிகள் மைந்தர் உள்ளத்திற் பதிந்தன. பெற்ருேருடைய அடக்கமும், நல்லொழுக்கமும் இவரை உருப்படுத்

தின. தந்தையார் கரூரில் தங்கித் திருப்பணிகள் செய்துவந்த காலத்தில், தனயர் கரூரில் ஒரு பள்ளியிற் சேர்ந்து, தமிழும் ஆங்கிலமும் கற்ருர்.

காருடுகாத்தானில் அஞ்சல் நிலயத்தலைவரா யிருந்த மீனாட்சி சுந்தரம் பிள்ளை, பொன்னுசாமிப் பிள்ளை என்பவர்களிடமும், நாயடு ஒருவரிடமும் இவர் ஆங்கிலக் கல்வி பயின்ருர்; சில ஆண்டு களுக்குள் ஆங்கிலம் பேசவும் எழுதவும் கற்ருர்; அவர்களிடம் ஆங்கிலம் கற்றுக்கொண்டே தந்தை யாரிடம் தொழிற் பயிற்சியும் பெற்ருர்; தொழிலில் நாள்தோறும் பல கடிதங்கள் எழுதிவந்தமை யாலும், சுதேசமித்திரன் பத்திரிகையில் அடுத் தடுத்துப் பல செய்திகள் குறித்து எழுதிவந்தமை யாலும் தமிழ் நடையிலும் திறமை பெற்ருர். இவருடைய பேச்சும் எழுத்தும் கற்ருரையும் மற் ருேரையும் கவர்ந்ததற்கு அடிப்படையான கார ணம், இவருடைய கூர்த்த நுண்ணறிவேயாகும்.

**நல்லார் இணக்கம்**

நாட்டரசன் கோட்டையைச் சேர்ந்த **பஞ் சாட்சர ஐயா** என்பவர் தனவணிகர். அவர் முத் தைய செட்டியாருக்கு நெருங்கிய நண்பர்; தமிழ் நூல்களை நன்கு படித்தவர்; திருக்குறளில் வல்ல வர்; சிறந்த சிவனடியார். அவர் முத்தைய செட்டி யாருடன் நெருங்கிப் பழகிவந்தமையால் இளைஞ ரான அண்ணுமலைச் செட்டியாருக்குத் தமிழ்ப் பற்று உண்டாகியது. இவர் திருக்குறளைப் படித் தார்; தேவார—திருவாசகங்களில் மன உருக்கம் மிகுந்தது. திருக்குறள் போன்ற நன்னூல்களிற் கருத்துச் சென்றதால், இவருடைய தமிழ் நடை

யும் தமிழ் மணம் பெற்றது. தந்தையாரிடம் பழகிய பெரியோர் பலருடைய நல்லுரைகள், சமயப் பற்று, அநுபவப் பேச்சுகள் முதலியவை, நுண்ணறிவு படைத்த அண்ணுமலைச் செட்டியார் உள்ளத்திற் பதிந்தன. இவரும் அவர்களைப் போலச் சிவநெறிச் செல்வராகவும், ஒழுக்கமுடையவராகவும், நாவன்மை பெற்றவராகவும் பிற்காலத்திற் சிறப்புற, **நல்லார் இணக்கம்** ஓரளவு துணை புரிந்ததென்னலாம்.

## சில பண்புகள்

தந்தையாரிடமிருந்து தொழில் முறை பழகி வந்த பொழுதே அண்ணுமலைச் செட்டியார் சுருங்கச் சொல்லி விளங்கவைக்கும் ஆற்றல் பெற்றிருந்தார்; பலர் எழுதும் நீண்ட கடிதங்களுக்கு மறுமொழியாகச் சில வரிகள் கொண்ட கடிதத்தையே எழுதுவார். 'செட்டிப்பிள்ளை பணத்தில் செட்டாக இருக்கும் என்பார்கள். இவரோ எழுத்திலும் செட்டாக இருக்கிறுர்', என்று இவருடைய கடிதங்களைப் படித்த பலர் பாராட்டியதுண்டு. இவர் தொழில் முறைக் கணக்குகளை ஒழுங்குபெற வைப்பதிலும் திறமை பெற்றுர்; தம் தொழில் தொடர்பாகப் பழகுபவரிடம் மலர் முகம் காட்டி, வரவேற்று, அவர் மனம் மகிழுமாறு பேசித் தம் வழியில் ஈர்ப்பதில் வல்லவர் என இளமையிலேயே பெயர் பெற்றுர். சிலரைப் போலப் பேசத் தொடங்கிய பொருளை விட்டு, வேறென்றைப் பேசும் இயல்பினை இவரிடம் காணுதல் அரிது. பிறரிடம் காணுதற்கு அரிய மறவாமைக் குணம், அனைவரும் வியக்கும் முறையில் இவரிடம் அமைந்திருந்தது.

இவரைப்பற்றித் திரு. சுத்தானந்த பாரதியார் அவர்கள் பின் வருமாறு எழுதியிருப்பது மிகவும் பொருத்தமாகும் :—

"ராஜா அவர்களுக்கு முற்கால வழக்கங்களும் தெரியும் ; இக்கால நாகரிகமும் தெரியும் ; ஓலையிலும் விரைவாக எழுத்தாணி ஓட்டத் தெரியும். காகிதத்திலும் ஊற்றுக்கோல் நடத்தத் தெரியும் ; அவர் சிதம்பரம் ஸ்ரீ நடராஜா சந்நிதியிலும் வைதிக விதிப்படி வழிபடுவர் ; டில்லி வைஸ்ராய் சபையிலும் நவநாகரிகப் பொலிவுடன் விளங்குவார். அவர் தேவாரத் திருமுறைகளைக் கேட்டுருகுவார் ; கோவில் திருப்பணியிலும் முதன்மை பெறுவார் ; தமது குலத்தொழில் விவகாரங்களிலும் விட்டுக் கொடுக்காமல், சீமை வரையில் எட்டிப் பிடித்துக் காரியத்தைச் சாதித்தே தீர்ப்பார். அவர் குறிப்புப் பேரேட்டிலும் குறிப்பாயிருப்பார் ; இம்மி விடாமற் கணக்குப் போடுவார் ; அள்ளியள்ளிக் கொடுப்பதிலும் மகிழ்ச்சியடைவார். அவர் வீட்டிலும் தலைவர் ; நாட்டிலும் தலைவர்."

## திருமணம்

அண்ணாமலைச் செட்டியாருக்குக் கி. பி. 1895-ஆம் ஆண்டில் பெற்றோர் திருமணம் செய்து காண விரும்பினர். பள்ளத்தூரில் பரம்பரைச் செல்வராகவும், பெருந்தகையாளராகவும் இருந்த பழநியப்பச் செட்டியார் மகளாரான சீதை என்னும் பெயர் கொண்ட மங்கையாரை மணப் பெண்ணாகத் தேர்ந்தெடுத்தனர். குல முறைப்படி, நல்ல நாளில் பள்ளத்தூரில் திருமணம் பெருஞ் சிறப்புடன் நடைபெற்றது.

சீதை ஆச்சி, சிறந்த குணங்கள் உடையவர்; கணவர் கருத்தறிந்து நடப்பவர்; கணவரை மகிழ்விப்பதையே வாழ்க்கை இன்பமாகக் கொண்டவர்; அவர் சொல்லை ஒரு போதும் கடவாதவர். அண்ணுமலைச் செட்டியாரின் வாழ்வு வளம்பெற வந்த அம்மங்கை நல்லார், மாமியார் மாமனுர் பாராட்டுக்கும் உரியரானமை வியப்பன்றே! மாமியாரிடம் அடக்க ஒடுக்கமாக இருந்து குடும்பப் பொறுப்பினை இவர் நன்கு உணர்ந்து கொண்டார்.

# 4. வாணிகப் பெருக்கம்

### தந்தையார் மறைவு

முத்தைய செட்டியார் தம் கடைசி மைந்தருக்குத் திருமணம் நடந்த பின், ஐந்தாண்டுகள் வரை இருந்தார். அப்பெரியார் 62 வயதுடைய அம்முதுமைப் பருவத்திலும், தம் குலத் தொழிலேயும், திருப்பணிகளேயும் குறைவற நடத்திவந்தார். அவர் 1901-ஆம் ஆண்டு ஜனவரித் திங்களில் இறையடி சேர்ந்தார். அவரது மறைவைக் கேட்டுச் சைவவுலகம் அடைந்த துயரம் மிகுதியாகும்.

### பாகப் பிரிவு

தந்தையார் இருந்தவரை குடும்பம் ஒன்ருக இருந்தது. தந்தையார் மறைந்த பின்பு மக்கள் மூவரும் ஒற்றுமை உணர்ச்சியோடு செல்வத்தை மூன்று பகுதியாகப் பிரித்துக்கொண்டனர் ; தனித் தனிக் குடும்பத்தை நடத்தத் தலேப்பட்டனர். பத்தொன்பது வயதினரான நம் அண்ணுமலேச் செட்டியார், தம் மனேவியாருடன் தனிக் குடும்பம் நடத்தத் தொடங்கினர் ; தம் குலத்தொழிலேயும் நடத்தலானர்.

### தொழில் முயற்சி

நம் செட்டியார், 1901-ஆம் ஆண்டு முதல் 1910-ஆம் ஆண்டுவரை தொழிலே அயர்ச்சி யின்றிப் பேரூக்கத்துடன் நடத்தினர். மு. அ. என்று விலாசம் வைத்துச் சிறந்த நகரங்களில் கடைகளே அமைத்தார் ; சிறு சிறு கடைகளாய்ச்

சிதறுண்டு கிடந்தவற்றை ஒன்று கூட்டி லிமிடெட் கம்பெனியாக்கிஞர்; ஆண்டுதோறும் புதிய புதிய துறைகளில் தொழிலே விரிவாக்கிஞர்; இந்தியாவில் காசி முதல் கன்னியாகுமரி வரையிலும், பர்மா, இலங்கை, மலேயா, கிழக்கிந்தியத் தீவுகள், சையாம் முதலிய கடல் கடந்த நாடுகளிலும் தொழில் துறைகளே நிறுவிஞர்.

" இதனே இதஞல் இவன்முடிக்கும் என்ருய்ந்து
அதனே அவன்கண் விடல் "

என்ற தமிழ் மறைக்கு ஒப்பச் செட்டியார், நிபுணர் களேயே தேர்ந்தெடுத்துத் தம் கடைகளில் வேலே பார்க்குமாறு நியமித்தார்; அவர்களின் உண் மைக்கும் உழைப்புக்கும் ஏற்ப ஊதியம் அளித் தார்; ஒவ்வொரு கடையிலும் கொடுக்கல் வாங்கல் கணக்குகளேச் செவ்வையாக வைக்கச் செய்தார்; கணக்கில் சிறிதளவும் விட்டுக் கொடுக்கும் இயல்பு இவரிடம் இல்லே.

இவர், இங்ஙனம் பல நாடுகளிலும் நிறுவிய கடைகள் செவ்வையாக நடைபெறுகின்றனவா என்பதை மேற்பார்க்க, அடுத்தடுத்து அந்நாடு களுக்குச் செல்வார்; வேலே நடப்பதை நேரில் பார்த்துக் குறைகளேத் தீர்த்துக் கடைகளின் வளர்ச்சிக்கு வேண்டுவனவற்றைச் செய்வார்; ஒரு மாதத்தில் ஆயிரக்கணக்கான மைல்கள் பிரயாணம் செய்வார். இவரிடம் குறிப்பேடும், எழுதுகோலும் எப்பொழுதும் இருக்கும். இவர் உறங்கும்பொழு தும் அவை பக்கத்தில் இருக்கும். இவர் இரவு நெடுநேரம் வரை கணக்குகளேப் பார்ப்பார். இவரைக் கணக்கில் ஏமாற்ற எவராலும் இயலாது.

## காலத்தின் அருமை

ஒருவன் வாழ்க்கை உயர்வடைவதும் தாழ் வடைவதும் அவனது கால ஒழுங்கைப் பற்றியது ; அவ்வக் காலத்தில் அவ்வவ் வேலையைச் செய்து முடிப்பவன் படிப்படியாக உயர்ந்த நிலையைப் பெறுவான் ; அவனுடைய அகமும் முகமும் மலர்ச்சியடையும் ; ஊக்கமும் உணர்ச்சியும் அவனுக்கு உண்டாகும் ; 'நமது கடமையைச் செய்து முடித்துவிட்டோம்' என்னும் எண்ணமே அவனை இன்பத்தில் ஆழ்த்தும். இங்ஙனமின்றி, 'இன்று செய்யவேண்டும் வேலையை நாளைச் செய்வோம்,' என்று தள்ளிப்போடுபவன், வாழ்க்கையில் வெற்றி பெறுன். ஏன்? இன்று செய்யவேண்டிய வேலை நாளை எனின், நாளை வேலை என்று நடைபெறும்? இவ்வாறு பார்த்தால் ஒரு நாளுக்குரிய வேலை தள்ளிக்கொண்டே போகுமன்றோ? தான் செய்யக் கடமைப்பட்டுள்ள வேலையைக் குறித்த காலத்தில் செய்யாதவன், சோம்பலுக்கும் அழிவுக்கும் தன்னை இரையாக்குபவனுவன். அவன் வாழ்வு சிறப்புருது.

இந்தியாவின் பெரும்பகுதியை ஒரு குடைக் கீழ் வைத்தாண்ட அசோகப் பேரரசன் காலத்தின் அருமையை நன்கு அறிந்தவன். அப்பெருமகன், காலை நான்கு மணி முதல் இரவு பத்து மணிவரை அயராது அரசியல் அலுவல்களைக் கவனித்து வந்தான். தன் குடிகள் நலமுறத் தக்க முறையில் ஆவனவெல்லாம் செய்தான். இங்ஙனமே இங்கிலாந்தையாண்ட ஆல்பிரெட் மன்னனும் காலத்தின் அருமையை அறிந்து நடந்தான்.

" காலமே உன் உயிர். அதனை வீணுக்குவது

உன்னை நீயே கொலை செய்துகொள்வதைப் போலா கும் '' என்ற சார்ல்ஸ் வாக்னர் பொன்னுரையும்,

> '' அருவினை என்ப வுளவோ கருவியாற்
> கால மறிந்து செயின் ''

என்னும் வள்ளுவர் வாக்கும் நினைவிற் கொண்டு, காலத்தை வீணாக்காது வினையாற்றுபவரே வாழ்க்கை என்னும் பிரயாணத்தை இனிது முடிப்பவராவர்.

இத்தகைய காலத்தின் அருமையை அண்ணு மலைச் செட்டியார் நன்கறிந்தவர். இவருடைய எல்லா வேலைகளும் குறித்த காலத்தில் நடந்தன. இவர் தம்மைக் காண வரும் நண்பர்களிடம் குறித்த நேரத்தில் குறித்த செய்தியைப் பேசி முடித்துக்கொள்வார்; பயனற்ற சொற்களைச் சொல்லார்; பிறர் சொல்வதையும் விரும்பார்; பேசும்பொழுதே எதிரிலுள்ள கடிகாரத்தைப் பார்ப்பார். பேச வந்தவர் அக்குறிப்பறிந்து தாமே விடைபெற்றுச் செல்வார். காலமே உயிர்; காலமே செல்வம்; காலமே எல்லாம் என்பது அண்ணுமலைச் செட்டியாரின் கருத்து.

### கோடீசுவரர்

காலத்தைப் பொன்போல மதித்தமையால் தான் இவர், பத்தாண்டுகளுக்குள் தம் தொழில் முயற்சியில் பேரூக்கத்துடன் உழைத்துக் கோடீசு வரர் ஆனுர். இவருக்குப் பர்மாவில் மட்டும் ஒரு நூறுயிரம் ஏக்கர் நன்செய் நிலம் உண்டு; ஆலைகள் சில உண்டு. இலங்கையிலும் மலேயாவி லும் பெரிய தென்னந் தோப்புக்களும், ரப்பர்த்

தோட்டங்களும், தேயிலைத் தோட்டங்களும் உள்ளன. தமிழகத்தில் இவருக்கு உரிய கிராமங்கள் பல உண்டு. சித்தூர் மாவட்டத்தில் மட்டும் 115 கிராமங்கள் "செட்டி நாடு எஸ்டேட்" என்னும் பெயரால் இருக்கின்றன.

தந்தையார் செல்வத்திலிருந்து சில லட்ச ரூபாய்களையே பிரித்துக்கொண்ட அண்ணாமலைச் செட்டியார், பல கோடியளவினதாய பெருஞ் செல் வத்தை எவ்வாறு பெற்றார்? உழைப்பு! அயரா உழைப்பு!

"உழைப்பின் வாரா உறுதிகள் உளவோ?" என்றார் பட்டினத்து அடிகள். இவரும் அவர் மரபில் வந்தவரன்றோ? இளைஞர்களாகிய உங்களுக்கு இது ஒரு வழிகாட்டியாக இருக்கத் தக்கது.

# 5. பொது நலப் பணிகள்

## நகரசபைத் தலைவர்

செட்டியார், 1910-ஆம் ஆண்டில், காரைக்குடி நகரசபைத் தலைவரானார்; 1913 வரை அப்பதவி யில் இருந்து, நகர நலனுக்குரிய பணிகளைக் குறை வறச் செய்தார். இவர் கானாடுகாத்தானிலிருந்து காரைக்குடிக்கு நாள்தோறும் காலையில் சென்றார். அக்காலத்தில் மோட்டார் வண்டி பழக்கத்தில் இல்லை. ஆதலின் இவர் வைகறையில் எழுந்து, நீராடிக் கோச்சு வண்டியில் அமர்ந்து, ஐந்தரை மணியளவில் காரைக்குடிக்கு வந்துவிடுவார்; வந்து, நகராண்மைக் கழக அலுவல்களைக் கவனிப் பார்; நகரசபை ஊழியர்களின் குறைகளைக் கேட் டுப் போக்குவார்; நகர சுகாதாரம், குடிதண்ணீர் வசதி, தொடக்கநிலைப்பள்ளி இவற்றிற் கருத்துச் செலுத்துவார். இவர், நகரசபைத் தலைவராகப் பெயரளவில் இருந்தார்; ஆனால், உண்மையில் நகர சபை ஊழியராகவே நடந்துகொண்டார்; ஊர்ப் பொது மக்கள் அனைவரிடமும் நன்றாகக் கலந்து பழகி, அவரவர் கூறிய யோசனைகளைக் கருத்தூன் றிக் கேட்டார்; நகர நலன் கருதி அவர்கள் கூறிய வற்றை நடைமுறையிற் கொணர்ந்தார். இவ்வாறு பொது மக்களுடன் நன்கு பழகி, நகரைச் சுற்றிப் பார்த்தும், மக்கள் தேவைகளை உணர்ந்தும் நகரத் திற்குப் பல நலன்கள் செய்தமையால், காரைக்குடி மக்கள், இவரது ஆட்சித் திறனை வியந்து பாராட்டி னர். இவ்வாறு முதல் எடுப்பிலேயே இவர், சிறந்த **பொதுநலப் பணியாளர்** எனப் பெயர் பெற்றார்.

### தீரச் செயல்

அக்காலத்தில், செட்டிநாட்டின் சில பகுதி களில், கள்வர் நடமாட்டம் இருந்தது. செட்டி நாட்டில், காரைக்குடிக்கும் பிற ஊர்களுக்கும் குதிரைத் தபால் வண்டிப் போக்கு வரவு இருந்தது. 1911-ஆம் ஆண்டு ஒரு நாள் இரவு திருமெய்யத்தி லிருந்து குதிரைத் தபால் வண்டி காரைக்குடியை நோக்கி வந்துகொண்டிருந்தது ; கள்வர் சிலர் அத் தபால் வண்டியை வழி மறித்தனர் ; அஞ்சல் மூட்டைகளைப் பறித்துக்கொண்டு ஓடிவிட்டனர். இச்செய்தி அண்ணாமலைச் செட்டியாருக்கு எட் டியது. அச்சம் என்பதை அறியாத இவர், உடனே தம் ஆட்களை அழைத்துக்கொண்டு, களவு நடந்த இடம் நோக்கி விரைந்தார். போகும் பொழுதே சாலை மூலை முடுக்கெல்லாம் தேடி, ஒரு தனி இடத்தில் கள்வர்களைக் கண்டுபிடித்தார் ; அவர்களிடமிருந்து அஞ்சல் மூட்டைகளை மீட்டார்.

### ‘ ராவ் பகதூர் ’ பட்டம்

இவ்வரிய செயலை அக்காலக் கலெக்டராக இருந்த சர் அலெக்ஸாண்டர் டாட்டன்ஹாம் என்பவர் பாராட்டி வெளியிட்டார். மாகாண அஞ்சல் நிலையத் தலைமை அலுவலர் (Post Master General), செட்டியாரது அரிய செயலைப் பாராட்டி, அன்னாருக்கு ‘ ராவ் பகதூர் ’ பட்டம் அளிக்குமாறு அரசாங்கத்திற்குச் சிபாரிசு செய்தார். அரசாங்கத் தார், நம் அண்ணாமலைச் செட்டியாருக்கு **ராவ் பகதூர்ப்** பட்டத்தை அளித்து மகிழ்ந்தனர். இவ் வாறு அண்ணாமலைச் செட்டியார், அரசாங்கத்தார்

பாராட்டலுக்கு உரியவரான சந்தர்ப்பங்கள் பல வாகும்.

## இங்கிலாந்து செல்லல்

' ஆங்கிலேயர் ஜப்பானியரைப் போலச் சிறிய தீவுகளில் வாழ்பவர் ; ஆனுல் வாணிகம், கல்வி, ஆட்சித்துறைகளில் முன்னணியில் இருக்கின்ற னர். அவர்தம் இத்தகைய முன்னேற்றத்திற்குரிய இரகசியம் யாது? நாம் அதனைக் கண்டறிய வேண்டும் ' என்னும் ஆவல் அண்ணுமலைச் செட்டி யாருக்கு உண்டாயிற்று. அதனுல் இவர், இங்கி லாந்துக்குப் புறப்பட்டார் ; பசுமலைக் கிறித்தவ மிஷன் காலனித் தலைவர் ரெவரண்ட் ஜான் மில்லர் என்பவரும், அவர் மனைவியாரும் இவருடன் சென்றனர். மில்லர் செட்டியாருக்கு நண்பர். அவர், இங்கிலாந்து மக்கள் வாழ்க்கை, அவர்க ளுடன் பழகும் முறை, அந்நாட்டில் நடந்து கொள்ள வேண்டும் முறை ஆகியவற்றை விளக்கி ஞர்.

## இங்கிலாந்தில் செட்டியார்

அண்ணுமலைச் செட்டியார், லண்டன் மாநகரில் வசதி மிக்க இடமொன்றில் தங்கினுர் ; லண்டன், கேம்பிரிட்ஜ், ஆக்ஸ்போர்டு முதலிய நகரங்களைப் பார்வையிட்டார் ; அங்கு இருந்த தொழிற்சாலை களையும், அரசாங்க அலுவலகங்களையும், பல்கலைக் கழகங்களையும், நூல் நிலையங்களையும் கண்டார். இவர் லண்டனில் தங்கியிருந்த பொழுது, ஐந்தாம் ஜார்ஜ் மன்னருக்கு (1911-இல்) முடி சூட்டு விழா நடைபெற்றது. வெஸ்ட்மின்ஸ்டர் என்னும் முடி

சூட்டு மண்டபத்தில் பெருமக்கள் குழுமியிருந்த னர். நம் செட்டியாரும் அழைக்கப்பெற்று, அவ் விழாவிற் கலந்துகொண்டு, காணற்கரிய அக்காட்சி யைக் கண்டு களித்தார்.

எதனையும் கூர்ந்து பார்த்து உள்ளத்தமைக் கும் இயல்பு கொண்ட செட்டியார், இங்கிலாந்தில் ஆங்கிலேயருடைய நடைமுறைகளை நன்கு அறிந் தார்; அவர்கள் ஒருவருக்கொருவர் பேசும் முறை, காலத்தைப் பொன்னைப் போலச் செலவிடல், நாநயம், குறித்தபடி தவருது நடத்தல் முதலிய நற்பண்புகளைக் கருத்தூன்றிக் கவனித்தார். ஆக்ஸ்போர்டு, கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகங்கள் இவர் கருத்தைக் கவர்ந்தன. இவர் சில நாட்கள் அங்குத் தங்கி, அவற்றின் நடைமுறைகளை உணர்ந்தார்.

## அறச்செயல் தொடக்கம்

அண்ணுமலைச் செட்டியார், இந்தியா மீண்ட வுடன் காரைக்குடி நகரத்தில் சுகாதாரச் சீர்திருத் தங்கள் பலவற்றை மேனுட்டு முறையை ஒட்டிச் செய்தார். இவரது இங்கிலாந்து அநுபவம், இவரை எல்லாத் துறைகளிலும் ஊக்கம் கொண்டு உழைக் கத் தூண்டியது. இவர், ஜான் மில்லர் பசுமலையிற் செய்துவந்த கல்வித்துறைத் தொடர்பான பய னுள்ள வேலைகளைப் பாராட்டிப் பொருள் உதவி புரிந்தார்; மதுரைக் கல்லூரிக் கட்டடம் கட்ட ரூபாய் அறுபதாயிரம் வழங்கி, நிலத்தையும் வாங்கி உதவினர்.

### அரசாங்க மதிப்பு

1912-இல் டெல்லி மாநகரில் ஐந்தாம் ஜார்ஜ் மன்னருக்கு முடிசூட்டு விழா நடைபெற்றது. இந்திய அரசாங்கம் மதித்து அழைப்பு விடுத்த தக்கார்களுள் நம் செட்டியாரும் ஒருவராவர். இவர் அவ்வழைப்பை ஏற்று, டெல்லி சென்று அவ் விழாவிற் கலந்துகொண்டார்.

### கானாடுகாத்தானில் அரண்மனை

கானாடுகாத்தானில் காட்சிக்கினிய கவினுறு மாளிகை ஒன்றை எழுப்ப, அண்ணாமலைச் செட்டியார் நினைத்தார்; அதனை 1915-இல் கட்டி முடித்தார். அஃது அப்பகுதிக்கே ஓர் அரண்மனையின் தோற்றத்தை அளித்து நிற்கிறது. வெளிச்சமும் காற்றோட்டமும் உள்ள முற்றங்கள், அறைகள், கூடங்கள் அரண்மனையின் அங்கங்களாக இருக்கின்றன. மாகாணக் கவர்னர்களும், அமைச்சர்களும், பெருமக்கள் பலரும் அவ்வரண்மனையில் அண்ணாமலைச் செட்டியாருடன் விருந்தருந்தி மகிழ்ந்தனர். அவ்வரண்மனை, செட்டியாருடைய உள்ளத்தின் உயர்வையும், அறிவு நுட்பத்தையும் விளக்குவது போன்ற தோற்றம் உடையது. மாளிகை அமைப்பிற்குரிய படத்தைத் (Plan) தாமே தயாரித்து, தாமே அருகிலிருந்து எழுப்பிய மாளிகையாதலின், கானாடுகாத்தான் அரண்மனை கவினுற்று விளங்குகின்றது.

### சென்னைச் சட்டசபை உறுப்பினர்

அண்ணாமலைச் செட்டியார், 1916 முதல் 1919 வரை சென்னைச் சட்ட சபையில் உறுப்பினராக

இடம் பெற்றுர். தொழில் நலம் கருதியும், அரசாங்க வேலை கருதியும் சென்னையில் தங்குதலே ஏற் புடையதெனக் கருதிய செட்டியார், சென்னை-புரசைப்பாக்கத்தில் ' நடன விலாஸ் ' என்ற பெயர் கொண்ட மாளிகையில் வாழலானுர்.

## மகளிர் மருத்துவச்சாலை

காறைடுகாத்தானில் மகளிர் மருத்துவச்சாலை ஒன்றை அமைக்க வேண்டுமென்று செட்டியார் நெடு நாட்களாக எண்ணமிட்டிருந்தார். அதற் குரிய இடத்தையும் குறிப்பிட்டு வைத்திருந்தார். சென்னை மாகாணக் கவர்னராக இருந்த பென்ட் லண்ட் அவர்கள், தம் மனைவியாருடன் ஒருமுறை காறைடுகாத்தானில் செட்டியாருடைய அரண்மனை யில் இரண்டு நாள் தங்கி விருந்துண்டு களித்தார். செட்டியார் அவரைக் கொண்டு, மருத்துவச்சாலைக் குரிய அடிப்படைக் கல் நாட்டு விழாவை நடத்திஞர். அங்கே கட்டப் பெற்ற அழகிய மருத்துவச்சாலை, **லேடி பென்ட்லண்ட் மருத் துவச்சாலை** என்னும் பெயருடன் விளங்குகிறது. அஃது அவ்வூரிலும், சுற்றுப்புற ஊர்களிலும் உள்ள மகளிர்க்கு மருத்துவ உதவி அளித்து வருகின்றது. சென்னை மாகாணத்திலேயே அஃது ஒரு சிறந்த மருத்துவ நிலையமாக விளங்குகிறது.

## தமையனுர் மறைவு

சிதம்பரத்தில் நகரசபைத் தலைவராயிருந்து பொதுநலப் பணிகள் செய்துவந்த திவான் பகதூர் இராமசாமிச் செட்டியாருக்குப் புத்திரப் பேறின்மை யால், அவர் விருப்பத்திற்கிணங்கி, நம் அண்ணு

மலைச் செட்டியார், தம் இரண்டாம் புத்திரராகிய இராமநாதன் செட்டியாரைத் தமையனுருக்குப் பிள்ளையாகக் கொடுத்து உதவினுர். தமையனுர் பல்லோர் பாராட்ட வாழ்ந்து, 1918-இல் இறையடி சேர்ந்தார். அவர்க்குப் பின் அவர் செய்த அறச் செயல்களை எல்லாம் அண்ணுமலைச் செட்டியாரே கவனிக்கலானுர்.

**தனவணிகர்களுக்குச் செய்த நலன்**

பலர், தாம் உயர்ந்தவுடன் தம் குலநலத்தை மறந்து விடுதல் இயல்பு; தம் குலத்தாரை முன்ன ணிக்குக் கொண்டுவர விரும்பார். அண்ணுமலைச் செட்டியார் அத்தகையார் அல்லர். இவர், தம்மைப் போலவே தம் இனத்தவரையும் முன்னணிக்குக் கொண்டுவர விரும்பினுர். அவர்கள் செய்துவந்த வட்டித் தொழிலை ஐரோப்பிய பாங்குகள் போல ஒழுங்காக நடத்த வழி காட்டினுர்; 1917-இல் சென்னையில் **நாட்டுக் கோட்டை நகரத்தார் சங்கம்** ஒன்றை நிறுவினுர்; சென்னைச் சட்ட சபையில் நகரத்தார் பிரதிநிதி ஒருவர் இருத்தல் வேண்டுமென்று முயற்சி செய்து, ஓர் உறுப்பினர் பதவியை நகரத்தார்க்கென்று ஒதுக்கச் செய்தார்; சென்னை நகர சபையில் தம் இனத்தவர் ஒருவர் உறுப்பினராக இருக்கும் உரிமையைப் பெற்ருர்; தம் இனத்தவர் எங்கு இருப்பினும் அவர்தம் குறை களை நகரத்தார் சங்க மூலமாகவே தீர்த்துவைக்க வழி செய்தார்; பர்மா சட்ட சபையிலும் தன வணிகர் ஒருவர் உறுப்பினராயிருக்க உரிமை யளிக்கச் செய்தார். மேலும் இவர் செய்த நன்மை களைப் பின்பு காணலாம்.

31

## இம்பீரியல் பாங்கு கவர்னர்

இந்தியாவில் 1920-ஆம் ஆண்டில் இம்பீரியல் பாங்கு நிலைநாட்டப்பட்டது. அது, முதலில் சென்னை, பம்பாய், வங்காளம் எனக் கிளைகளாகப் பிரிந்து தனித்தனியே நடந்தது. இம்மூன்றும் 'இம்பீரியல் பாங்கு ஆப் இந்தியா' என்னும் பெயரால் ஒன்று சேர்க்கப்பெற்றன. அக்கால வைஸ்ராய், அதனை நால்வர் பொறுப்பில் விட்டார்; அவருள், சென்னை மாகாணச் சார்பில், நம் அண்ணாமலைச் செட்டியார் நியமனம் பெற்றார். இவர், பல ஆண்டுகள் இம்பீரியல் பாங்கின் கவர்னராக இருந்தார்.

# 6. மீனாட்சி கல்லூரி

அண்ணாமலைச் செட்டியாருக்குக் கல்வியில் மிகுந்த ஆர்வம் உண்டு. இவர், தம் தமையனார் நிறுவிய சிதம்பரம் உயர்நிலைப் பள்ளியின் பொறுப்பை ஏற்றுக்கொண்டது முதல், ஒரு கல்லூரி நிறுவவேண்டும் என்று எண்ணங்கொண்டார்; முதலில் மதுரைக் கல்லூரிக்குப் பொருள் உதவி, அதனை உயரிய நிலைக்குக் கொண்டுவர நினைந்தார்; கல்லூரிக்கு நிலம் வாங்கினார்; பின்னர் உண்டான மன மாற்றத்தால், சிதம்பரமே கல்லூரி நிறுவத்தக்க இடம் என்று துணிந்தார். செட்டியார் நன்கு ஆராய்ந்தே தமது கல்விப் பணியைத் தொடங்கினார்; தம் தமையனார் அமைத்த உயர்நிலைப் பள்ளிக் கட்டடத்திலேயே கல்லூரி தொடங்க முடிவு செய்தார்; அதற்குத் தம் அருமைத் தாயார் பெயரையே வைக்கத் துணிந்து, **மீனாட்சி கல்லூரி** என வழங்கினார்.

கல்லூரி அமைக்க அரசாங்கத்தார் இசைவு வேண்டி, 1920-ஆம் ஆண்டு ஏப்பிரல் திங்களில் இவர் விண்ணப்பம் விடுத்தார்; அரசாங்கத்தார் இசைவு வரும் என்ற துணிபால், கல்லூரிக்கு வேண்டிய பண்பட்ட, புகழ் வாய்ந்த ஆசிரியர்களைத் தேர்ந்தெடுத்தார்; கல்லூரிக்குப் பெரிய நூல் நிலையத்தை அமைத்தார்.

இம் முயற்சிகளுக்கிடையே அரசாங்கத்தார் இசைவு வந்தது. மீனாட்சி கல்லூரி 24-6-1920-இல் தொடங்கப் பெற்றது. இராமசாமிச் செட்டியார் உயர்நிலைப் பள்ளிக் கட்டடத்திலேயே மீனாட்சி கல்லூரி தோற்றமெடுத்தது; கல்லூரி முதல் வகுப்

புத் தொடங்கப் பெற்றது ; பதினொரு ஆசிரியர்கள் பணி புரிந்தனர் ; 58 மாணவர், முதல் வகுப்பில் பயின்றனர் ; இரண்டாம் ஆண்டில் மாணவர் தொகை 75 ஆக உயர்ந்தது. அப்பொழுது ஆங் கிலம், வரலாறு, பொருளாதாரம் முதலிய (விஞ் ஞான பாடங்கள் அல்லாத) பாடங்கள் கற்பிக்கப் பட்டன.

### கல்லூரிக்குப் புதிய இடம்

கல்லூரியை முதல்தரக் கல்லூரியாக்கி, அதில் பலதுறைப் பாடங்களையும் கற்பிக்க வேண்டும் என்பது செட்டியாரது அவாவாகும். அம்முயற்சி பயனளிக்க வேண்டுமாயின், பெரிய கட்டடங்கள் தேவை ; விஞ்ஞான ஆராய்ச்சிக் கூடங்கள் தேவை ; ஆதலின் புதிய இடத்தில் கல்லூரி அமைக்க வேண்டும் என்று செட்டியார் கருதினர் ; அதற்குரிய இடம் எது என்று ஆழ்ந்து ஆராய லானார். இவரது மனம் அல்லும் பகலும் பெரிய பெரிய கட்டடங்களைக் கட்டிக்கொண்டே யிருந்தது.

### திருவேட்களம்

சிதம்பரம் புகைவண்டி நிலையத்திற்குக் கிழக்கே ஏறத்தாழ ஒன்றரைக் கல் தொலைவில் திரு வேட்களம் என்னும் சிற்றூர் இருக்கிறது. அதில் அப்பராலும், சம்பந்தராலும் பாடப்பெற்ற சிவன் கோவில் ஒன்று உள்ளது. அச்சிற்றூரின் ஒரு புறம் மணல் வெளியாயும், மற்றொரு புறம் மரம் அடர்ந்த பகுதியாயும் இருந்தன. ஒரு நாள் செட்டியார், தம் நண்பர் சிலருடன் திருவேட்களத்

துக்குச் சென்ருர் ; கோவிலுக்குள் சென்று அம்மை யப்பரை வணங்கிஞர் ; வெளியில் வந்து நின்று கோவிலுக்கு எதிரில் இருந்த திறந்த வெளியைப் பார்வையிட்டார் ; அப்பொழுது இரண்டு கருடன் கள் ஒலித்து வேட்கள நகரைச் சுற்றி வட்ட மிட்டன. அக்காட்சியைக் கண்டு உளம் மகிழ்ந்த செட்டியார், அவ்விடத்திலேயே கல்லூரி கட்டத் துணிந்தார் ; நூறு ஏக்கர் நிலம் வாங்கிஞர்.

**கல்லூரியின் புதிய தோற்றம்**

கட்டட வேலை 1920-இல் தொடங்கியது. செட்டியார் இடையில் பர்மா சென்று மீண்டார் ; 1921-ஆம் ஆண்டில் திருவேட்களத்தில் தங்கிக் கட்டட வேலையை விரைவு படுத்திஞர் ; கட்டட வேலை நடந்தபொழுதே கல்லூரி வகுப்புக்களும் பெருகலாயின. 1922-இல், பி. ஏ. வகுப்புத் தொடங்கப்பெற்றது. அதனைத் தொடங்கி வைத் தவர், தென்னிந்தியாவில் புகழ் வாய்ந்த கல்வி யறிஞராக இருந்த டாக்டர் சர். சி. ஆர். ரெட்டி அவர்கள் ஆவர். ஒரு கட்டடம் முடிந்ததும் மற் ருெரு கட்டடம் தலைதூக்கத் தொடங்கியது. இங் ஙனம் சில கட்டடங்கள் தோன்றவே, கல்லூரி, வனப்பு வாய்ந்த கல்லூரியாகக் காட்சி அளிக்கலா யிற்று. மாணவர் தொகையும் பெருகியது. இங் ஙனம் நான்கு ஆண்டுகளுக்குள் மீனுட்சி கல்லூரி முதல்தரக் கல்லூரியாகத் தோற்றமெடுத்தது.

1924-இல், மாணவர் தங்க விடுதி ஒன்று கட்டப்பட்டது; ஆசிரியர் சிலர் வாழ வீடுகள் கட்டிக் கொடுக்கப்பட்டன. 1925-இல், பி. ஏ. ஆனர்ஸ் வகுப்புத் தொடங்கப்பட்டது ; அவ்வகுப்

பில் ஆங்கிலம், வரலாறு, பொருளாதாரம் என்னும் மூன்று பாடங்களும் கற்பிக்கப்பட்டன. 1925-இல், விஞ்ஞானக் கலைக்குரிய ஆய்வுக் கூடங்கள் எழுந் தன; அக்கலைப் பாடங்களைக் கற்பிக்க ஆசிரியர் கள் நியமனம் பெற்றனர். சென்னை கவர்னர் கோஷன் அவர்கள், விஞ்ஞானக் கலை மாளிகை யைத் திறந்து வைத்து, அண்ணாமலைச் செட்டி யாரின் கல்வித்துறைத் தொண்டினை வியந்து பாராட்டினார்.

சிறந்த வரலாற்றுப் பேராசிரியரான கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் கல்லூரித் தலைவரானார். அப்போது 426 மாணவர் கல்வி பயின்றார்கள். கல்லூரி இடைநிலை வகுப்புகளில் ஆங்கிலமும், தாய்மொழியும் முதன்மையான பாடங்கள். பௌதிகம், இரசாயனம், கணிதம், வரலாறு, தத்துவம் என்பவை விருப்ப பாடங்கள். பி. ஏ. வகுப்புக்களில் கணிதம், பௌதிகம், இரசாயனம், தத்துவம், வரலாறு, பொருளாதாரம் என்பவை தனித்தனியே பட்டமளிப்புப் பாடங்களாக நடந்தன.

## அரசாங்க சபை உறுப்பினர்

மீனாட்சி கல்லூரி தொடங்கியது முதல், அண் ணாமலைச் செட்டியாரது புகழ் நாடெங்கும் பரவி யது. தமிழகத்தில் இவர் சிறப்புற மதிக்கப் பெற்றார். அந்நிலையில் இவர் 1921-இல், அரசாங்க சபை (Council of State) உறுப்பினர் தேர்த லுக்கு நின்றார். வாக்காளருள் பெரும்பாலோர் இவருக்கே பெருமகிழ்ச்சியுடன் தம் வாக்குக்களை அளித்தனர். அதனால், இவர் அப்பேரவையில்

உறுப்பினராஞர்; 1921 முதல் 1935 முடியத் தொடர்ச்சியாகப் பதினைந்து ஆண்டுகள் உறுப்பினராக இருந்து நாட்டு மக்கள் மதிப்பையும், அரசாங்கத்தார் மதிப்பையும் பெற்ருர்; அரசாங்க சபையில் அரிய பணிகள் செய்தார்.

அரசாங்க சபையில் இவர் பேசிய பகுதிகளை நோக்கிஞல், இவருடைய அறிவாற்றலும், ஏழைகளிடத்து இவருக்கு உள்ள இரக்கமும், நம் இந்தியர்களின் உயர்வில் உள்ள ஆர்வமும், தாம் நியாயம் என உணர்ந்ததை அஞ்சாது எடுத்துரைக்கும் ஆற்றலும் நன்கு புலஞகும். எடுத்துக் காட்டாகப் பின்வரும் இரண்டு பகுதிகளைக் காண்க:

**ஏழைகளிடத்து இரக்கம் பற்றியது**

"ஐயா, அரசாங்கத்தில் ஒவ்வோர் இலாக்காவிலும் அசாத்தியமான செலவாகிறது. செலவைக் குறைக்க வேண்டுமென்று பேச்சு நடக்கிறது; செயலைக் காணேம். சிப்பந்திகள், சம்பளத்தை அதிகப்படுத்த வேண்டுமென்று ஒரு புறம் முறையிடுகிருர்கள். இந்த வகையில் நான் சொல்வதைக் கேட்கத் தயவு செய்யுங்கள். ஐயா, இக்காலத்தில் செலவுகள் அசாத்தியமாக இருக்கின்றன. குறைந்த சம்பளக்காரருக்கு அதிகச் சம்பளம் கொடுங்கள். அதிகச் சம்பளக்காரருக்குச் சம்பளத்தை உயர்த்துவது சரியன்று. அந்தஸ்துக்குத் தக்கபடி செலவாகும் என்பதைச் சொல்லாதீர்கள். ஆயிரக்கணக்கான ஏழைச் சம்பளக்காரர் வயிற்றுக்கே திண்டாடும் போது அந்தஸ்தென்ன வேண்டியிருக்கிறது?"

## இந்தியருக்கு உயர்ந்த உத்தியோகம் கொடுப்பது பற்றியது

"ஐயா, எல்லா உத்தியோகங்களிலும் இந்தியரை அதிகமாக நியமிக்க விரும்புவதாகச் சர்க்கார் அடிக்கடி சொல்வது உண்டு. சில இலாகாக்களில் இப்படிச் சிறிதளவு நடந்திருப்பது மெய்தான். ஆனால், துறைமுக இலாக்காவில், இந்தப் பேச்சே இல்லை. அதில் 500 ரூபாய்ச் சம்பளக்காரர் 439 பேர்களில், 27 பேர்களே இந்தியர்கள். ஆயிர ரூபாய் சம்பளம் வாங்கும் 168 பேர்களில் ஒருவர்கூட இந்தியரில்லை. பொது ஊழியங்களிலெல்லாம் இந்தியரே மிகுதியா யிருக்கவேண்டும் என்று நாடு மன்றாடும்போது, இப்படி இங்கே இவ்வளவு குறையிருப்பது ஏன்? துறைமுக இலாக்கா வேலையை அனைவருக்குமே பொதுவாக்கி, அதிகமான இந்தியரை நியமிக்க வேண்டும்."

## திவான் பகதூர், ஸர்

செட்டியார் அவர்களின் பொதுநலத் தொண்டுகளைப் பாராட்டிய அரசாங்கத்தார், 1922-இல், அவருக்குத் **திவான் பகதூர்** என்ற பட்டத்தை அளித்துக் களித்தனர்; அடுத்த ஆண்டிலேயே (1923-இல்) **ஸர்** என்னும் மாட்சிமிக்க பட்டத்தையும் வழங்கி மகிழ்ந்தனர்.

## நான்கு கல்லூரிகள்

மீனாட்சி கல்லூரி உருப்பெற்ற பின்பும் அண்ணாமலைச் செட்டியார் உள்ளம் நிறைவு அடையவில்லை. தமிழ்மொழிக்கும், வடமொழிக்கும்

தனித்தனி கல்லூரி காண விரும்பினர்; 1927-இல், தமிழ்க் கல்லூரியையும், வடமொழிக் கல்லூரியையும் நிறுவினர்; தமிழ்க் கல்லூரிக்கு மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்களைத் தலைவராக்கினர்; வடமொழிக் கல்லூரிக்கு மகாமகோபாத்தியாய தண்டபாணி சுவாமி தீட்சிதர் அவர்களைத் தலைவராக நியமித்தார்; பின்னர், ஆசிரியப் பயிற்சிக் கல்லூரி ஒன்றையும் உண்டாக்கினர். கரும்பு தின்னக் கூலி கொடுப்பதுபோலப் புலவர்க்குப் பொருளுங் கொடுத்து ஆசிரியப் பயிற்சி அளித்த தமிழ்க் கல்லூரி, மாகாணத்தில் இது ஒன்றேயாகும். எண்ணிறந்த தமிழர்கள் புலவர் கல்லூரியில் சேர்ந்து பயின்றனர்; தமிழ் நாட்டுப் பெரும் புலவர்கள் என்று கருதப்பெற்ற பேராசிரியர்கள், வேலையில் அமர்த்தப்பட்டார்கள்.

அண்ணாமலைச் செட்டியார் 1929-ஆம் ஆண்டில், இசைக் கல்லூரி ஒன்றையும் அமைத்தார்; நாடறிந்த இசை வல்லுநர்களை ஆசிரியர்களாக அமர்த்தினர்; தமிழ்நாட்டுப் பல பகுதிகளிலிருந்தும், யாழ்ப்பாணத்திலிருந்தும் மாணவ மாணவிகள் வந்து இசைக் கல்லூரியிற் சேர்ந்தனர்.

### கல்லூரிக்குக் காந்தியடிகள்

1927-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 11-ஆம் நாள், காந்தியடிகள் கதர் நிதி வசூலுக்காகத் தில்லையை அடைந்தனர்; கல்லூரி ஆசிரியர், மாணவர் ஆகியோர் அழைப்பிற் கிணங்கிக் கல்லூரிக்குச் சென்றார்; அங்கு அவர்கள் மனம் உவந்து அளித்த பண முடிப்பையும் பாராட்டு இதழையும் பெற்று மீண்டார்.

## தமிழ் மக்கள் பாராட்டு

இங்ஙனம் பல கல்லூரிகளையும் ஏறக்குறைய இருபது லட்சம் ரூபாய் செலவில் நிறுவிய அண்ணுமலைச் செட்டியாரைத் தமிழ் மக்கள் மன மகிழ்ந்து பாராட்டினர்; "சங்க காலத்தில் வள் ளல்கள் வாழ்ந்தனர் என்று படித்திருக்கிறோம்; பார்த்திலம். நமது தமிழகத்து நற்பயனால், இக் காலத்தில் இவ்வள்ளலைப் பார்த்தோம். இப்பெரி யாரது கல்வித் தொண்டு சிறந்து வாழ்க! இவர் மனைவியும் மக்களும் வளம்பெற்று வாழ்க!" என்று உள்ளக் கனிவுடன் வாழ்த்தினர். தமி ழன்னையும் அங்ஙனமே வாழ்த்தினள். வையத்து வாழ்வாங்கு வாழப்பிறந்த வள்ளலை வாழ்த்தாதார் யாவர்? இக்கருத்துக்கள் அமைய யான் பாடிய பாடல்* ஒன்றும் உண்டு.

---

* தண்டமிழைப் பேணியநற் சங்கமும் போய்ச்
சார்பாய தலைவ ரும்போய்
வண்டமிழ்வல் லாரெல்லாம் வருந்தியபோழ்(து)
உனைக்கண்டு வாட்டம் நீங்கிக்
கண்டனம்எம் தமிழ்வேந்தைக் களைகணிலாத்
தமிழ்த்தாயும் கவினுர் சீர்த்தி
கொண்டனள்என்(று) உளமகிழ்ந்தார் நினையன்றி
இப்பெருமை கொண்டார் யாரே!

# 7. அண்ணுமலைப் பல்கலைக் கழகம்

## பல்கலைக் கழக உணர்ச்சி

ஆந்திர நாட்டிற்கு ஒரு பல்கலைக் கழகம் வேண்டும் என்று ஆந்திரர் செய்த கிளர்ச்சியின் பயனாக 1926-இல், ஆந்திரப் பல்கலைக் கழகம் தோன்றியது. ஆயின், கட்டுப்பாடு அற்ற தமிழ ரிடையே தமிழ்ப் பல்கலைக் கழகம் தோன்ற வழி இல்லை. உலகில் மிகப் பழைய மொழிகள் சிலவற் றுள் ஒன்ருகிய தமிழ் மொழிக்குத் தமிழ் மக்களின் அறியாமையாலும், ஒற்றுமைக் குறைவாலும் செல்வாக்கில்லாதிருந்தது. ஆயினும் தமிழறிஞர் சிலர் மனம் கொதித்தது ; தமிழ்ப் பல்கலைக் கழகம் காணவேண்டும் என்று அவாவியது. 1927-ஆம் ஆண்டில், அவர்கள் சென்னைக் கல்விக் கழகத்தின் சார்பில் கூடித் தமிழர் முன்னேற வேண்டுமாயின், தமிழ்ப் பண்புடன், தமிழர் நலம் கருதி, ஒரு பல் கலைக் கழகம் இருத்தல் வேண்டும் ; அதனை விரை வில் காணுதல் வேண்டும் என்று முடிவு செய்தனர்; முடிவு சிறந்தது ; ஆவலும் சரியானதே. ஆயின், பல லட்ச ரூபாய் வேண்டுமே! என்ன செய்வ தென்று தோன்ருது அறிஞர்கள் விழித்துக்கொண் டிருந்தனர்.

## வள்ளல் முன்வந்தார்

தமிழ் அறிஞர் தீர்மானத்தை நமது அண்ணு மலைச் செட்டியார் படித்தார். இவர் தமிழரல்லரோ? தமிழ் அன்னை இவர் உள்ளக் கமலத்தில் குடி புகுந் தாள் போலும்! இவர் தமது மீனுட்சி கல்லூரி யையே பல்கலைக் கழகமாக மாற்றத் துணிந்தார் ;

அதற்கு ஆகும் பெருந் தொகையை வழங்கத் துணிந்தார்; இவரது பெரு வண்மையைப் பாராட்டிச் சென்னை அரசாங்கமும் பொருள் உதவ முன் வந்தது; இது தமிழர் பெற்ற பேறேயாகும். 1928-ஆம் ஆண்டு ஜூன் மாதம் 27-ஆம் நாள் செய்தித் தாள்களில் ஒரு செய்தி வெளிவந்தது. அஃதாவது :—

" திவான் பகதூர் சர். அண்ணாமலைச் செட்டியார் இருபது லட்ச ரூபாய் நன்கொடை அளித்துத் தமது மீனாட்சி கல்லூரியையே ஒரு பல்கலைக் கழக மாக்க முன்வந்துள்ளார். அரசாங்கத்தார் அவரது பெருங் கொடையைப் போற்றித் தாமும் 27 லட்ச ரூபாய் அளித்து, ஆண்டுதோறும் ஒன்றரை லட்சம் உதவ மகிழ்ச்சியுடன் முன்வந்திருக்கிறார்கள் " என்பதாகும்.

எதிர்பாராத இச்செய்தியைப் படித்தவுடன் தமிழ் மக்கள் அனைவரும் அண்ணாமலைச் செட்டியாரையும், அரசாங்கத்தாரையும் பாராட்டினர்; செட்டியார் அவர்களின் தாய்மொழிப் பற்றையும், கல்வித் துறைக்கு அவர் செய்யும் பெருந் தொண்டினையும் போற்றிப் புகழ்ந்தனர்.

**பல்கலைக் கழக மசோதா**

அண்ணாமலைச் செட்டியார் முயற்சியால் தோன்ற இருக்கும் பல்கலைக் கழகத்திற்கு **அண்ணாமலைப் பல்கலைக் கழகம்** என்றும், அதன் சார்பாக அமைக்கப் பெறும் நகரத்திற்கு **அண்ணாமலை நகர்** என்றும் அரசாங்கத்தாரே பெயரிட்டனர். பல்கலைக் கழகத்திற்கு உரிய விதிகள் எழுதப் பெற்றன; அவ்விதிகள் சென்னைச் சட்டசபையில்

ஏற்றுக்கொள்ளப் பெற்றுச் சட்டமாதல் வேண்டும். அங்ஙனம் சட்டமான பின்பே அரசாங்கத்தார் உதவி பல்கலைக் கழகத்திற்குக் கிடைக்கும்.

8–9–1928-இல், பல்கலைக் கழக விதிகள் சட்ட சபையில் விவாதத்திற்கு எடுத்துக்கொள்ளப்பட்டன. அப்பொழுது நடந்த விவாதத்தில் பங்கு கொண்ட அறிஞர் பலர். அவருள் அப்பொழுது முதல் அமைச்சராயிருந்த டாக்டர் சுப்பராயன், எஸ். சத்தியமூர்த்தி, சர். ஏ. பாத்ரோ, சர். கே. ராமுண்ணி மேனன் என்பவர் குறிப்பிடத் தக்கவராவர்.

**டாக்டர் சுப்பராயன்** அவர்கள் பல்கலைக் கழக மசோதாவைச் சட்டசபையில் கொண்டுவருகையில், "தில்லையம்பதிக்கு அருகில் ஒரு பல்கலைக் கழகம் நிறுவ ஒரு மசோதா கொண்டுவருகிறேன். மீனாட்சி கல்லூரி நிறுவியவரான சர். அண்ணாமலைச் செட்டியார் பொருள் உதவியால், இப்புதிய பல்கலைக் கழகம் நிறுவப்படும்; இம் மசோதாவை ஆய்வுக் குழுவினர் அவைக்கு முன் வைக்கிறேன்," என்று கூறினர்.

**சர். ஏ. பி. பாத்ரோ** அவர்கள், "ஆந்திரர் கலைப் பண்பை வளர்க்கத் தனிப் பல்கலைக் கழகம் தோன்றினாற் போலத் தமிழர் கலைப் பண்பைப் பாதுகாத்து வளர்க்கத் தமிழர்க்கென்று ஒரு தனிப் பல்கலைக் கழகம் வேண்டுவதே. ஆதலின் நான் மனமார இம் மசோதாவை ஆதரிக்கின்றேன்," என்றார்.

**ஆர். சீநிவாச ஐயங்கார்** அவர்கள், "நான் இம் மசோதாவை முழுமனத்துடன் வரவேற்கிறேன். சர். அண்ணாமலை அவர்களின் அறச் செயல்கள் போற்றத் தக்கன. அவர் இப்பொழுது

உண்டாக்க இருக்கும் பல்கலைக் கழகம் நாட்டிற்கே புதியது. இத் தமிழகத்தில் எந்தச் செல்வரும், மன்னரும், வணிகரும், இத்தகைய பேரறத்தை இதுகாறும் செய்ததில்லை,'' எனப் பாராட்டிப் பேசினார்.

**டாக்டர் சுப்பராயன்** அவர்கள் மீண்டும், ''இப் பல்கலைக் கழகம் உயரிய நோக்கம் கொண்டது. சர். அண்ணாமலைச் செட்டியாரது கருத்தை அறிந்தவுடன் நாங்கள் அதற்குத் துணைபுரிவதாக வாக்களித்தோம்; பல்கலைக் கழகத்திற்குரிய திட்டத்தையும், செலவுத் தொகையையும் வகுத்தோம். பொருளமைச்சரும் எங்கள் திட்டத்தை ஆதரித்தார். நம் நாட்டு இளைஞர்கள் தேர்வில் வெற்றி பெறுதல் மட்டுமே இப் பல்கலைக் கழக நோக்கமன்று. ஒழுக்கமும், பொதுநலத் தொண்டு புரியும் மனப் பான்மையும் உடைய நன்மக்களை நாட்டிற்கு அளிப்பதே இதன் சிறந்த நோக்கமாகும். ஆசிரியரும், மாணவரும் உடனுறையும் கல்வி வாழ்க்கை வேண்டும் என்று **ஸாட்லர்** அறிக்கை கூறுகிறது. அக்குறிக்கோளை இது நிறைவேற்றுவதாக இருக்கிறது. சாதி மத வேறுபாடின்றி, அனைவரும் இக்கழகத்தில் கல்வி பயில்வர்; கலந்து பழகுவர். நாம் தமிழரைப்பற்றி வானளாவப் புகழ்கிறோம். ஆனால், தமிழ் இன்னும் போதிய முன்னேற்றம் அடையவில்லை. இப்புதிய பெருங் கழகம், தமிழ் வளர்ச்சியிலேயே மிகவும் கருத்தூன்றும். தமிழருக்கு ஒரு தனிப் பல்கலைக் கழகம் வேண்டும் என்று நாம் முன்பு கருதினோம். அக் கருத்து இப்போது சர். அண்ணாமலையின் தருமத்தால் நிறைவேறுகிறது. அவர், பொது நலத்திற்கே

வாரி வழங்கிய வள்ளல். அவருக்கு நம் நன்றி உரியது,'' என்று நயம்பட மொழிந்தார்.

**சர். கே. ராமுண்ணி மேனன் அவர்கள்,** '' சர். அண்ணுமலைச் செட்டியாரின் பெருவள்ளன் மையை நான் பாராட்டுகிறேன். இது போன்ற ஆசிரியரும், மாணவரும் உடன் உறை பெருங் கழகத்தை நாட்ட, நாம் சென்னையில் எவ்வளவோ முயன்ருேம் ; ஆயினும் பயனில்லை ; செட்டியாரது செயல், தென்னிந்தியாவிற்கே பெருமை அளிப்ப தாகும். நான் சென்னைப் பல்கலைக் கழகச் சார்பில் இம் மசோதாவை மனமார ஆதரிக்கிறேன்,'' என்று பேசினுர்.

**எஸ். சத்தியமூர்த்தி அவர்கள்,** '' நான் எடுத்ததை எல்லாம் எதிர்ப்பவன் என்று என்னைப் பலர் குறை கூறுவர். ஆயின், அவர்களும் வியப்புறுமாறு, நான் இம் மசோதாவை ஆதரிக் கிறேன். சென்னைப் பல்கலைக் கழகத்தைக் காட்டி லும் பல துறைகளில் இப்புதிய பல்கலைக் கழகம் நாட்டிற்குத் தொண்டாற்றும் என்பது எனது நம்பிக்கை. இந்திய முதன் மொழிகளான தமிழ் மொழிக்கும், வடமொழிக்கும் இங்கு இடம் உண்டு ; வளர்ச்சி உண்டு ; செல்வாக்கு உண்டு. இவ்வாறு உடன் உறை கழகம் ஒன்று தென் இந்தியாவில் இல்லை. இஃது ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத் தைப் போன்றது ; நமது நாட்டுப் பண்டைய குருகுலத்தைப் போன்றது. இம் முயற்சியை மேற்கொண்ட பெருவள்ளலைப் பாராட்டுகிறேன். பொருளமைச்சர் உளம் கனிந்து இக்கழகத்திற்குப் பல லட்சம் உதவ முன்வந்ததை மனமாரப் பாராட்டுகிறேன் ; அரசாங்கத் தொகை இந்த நற்

பணிக்கேனும் சிறிதளவு பயன்படட்டும்,'' என்று பேசினார்.

### ஆய்வுக் குழு

பின்பு மசோதாவை ஆய்ந்து முடிவு கூறக் குழு ஒன்று அமைக்கப்பட்டது. **திவான் பகதூர் குமாரசாமி ரெட்டியார்** அதன் தலைவராக நியமிக்கப் பெற்றார். ஆய்வுக் குழு, ஒரு திங்கள் மசோதாவை ஆராய்ந்து, திருத்தம் செய்து, சட்ட சபை அரங்கேற்றத்திற்கு உரிய நிலையில் அமைத்தது. அத்திருத்த மசோதா 11-10-1928-இல், சட்ட சபையில் எடுத்துக்கொள்ளப்பட்டது.

### மசோதா அரங்கேற்றம்

மசோதாவின் ஒவ்வொரு விதியும் சபையினர் ஆராய்ச்சிக்கு விடப்பட்டது. பெரும்பாலான விதிகள் அனைவராலும் ஒப்புக்கொள்ளப்பட்டன. இரண்டொரு விதிகளில் சில திருத்தங்கள் சேர்க்கப் பட்டன. மறுநாள் மீண்டும் விவாதம் தொடங்கியது. அன்று மாலை அண்ணாமலைப் பல்கலைக் கழக மசோதா சட்டம் ஆயிற்று. இவ்வளவு விரைவில் மசோதா சட்டமானதற்குக் காரணம் என்ன? சர். அண்ணாமலைச் செட்டியாரது நன்னோக்கமும், அரசாங்கத்தாரது உளமார்ந்த ஆதரவும், சட்டசபை உறுப்பினரது பெருந்தன்மையுமே ஆகும்.

### சட்டசபையில் பாராட்டு

**டாக்டர் சுப்பராயன்** அவர்கள், "இப்பொழுது அண்ணாமலைப் பல்கலைக் கழக மசோதா சட்டமானதைக் களிப்புடன் அறிவிக்கிறேன். என்

மதிப்பிற்கு உரிய நண்பர் சர் அண்ணுமலைச் செட்டியாரது வள்ளன்மையால் உருப்பெறும் இக் கழகம் வெற்றி பெற்று வாழ்வதாக!'' என்று நல்லுரை கூறினர்.

எஸ். சத்தியமூர்த்தி அவர்கள், "இம் மசோதா சட்டமானதுபற்றி நான் மிக்க மகிழ்ச்சி யுறுகிறேன். என் நண்பர் சர். அண்ணுமலைச் செட்டியார் ஏறத்தாழ 40 லட்ச ரூபாய் பெறுமான முள்ள பொருள்களையும், தொகையையும் இப் பல்கலைக் கழகத்திற்கு வழங்கியுள்ளார். இங்ஙனம் தென்னிந்தியாவில் இதுகாறும் எவருமே செய் திலர். அவர் நிறுவ இருக்கும் கழகம் தென் இந்தியாவிற்கே புதியது. இஃது உடன் உறை பல்கலைக் கழகம். இதில் நியமனம் பெறும் ஆசிரியர்கள் கல்வியுலகிற் புகழ் படைத்தவர்களாய் இருப்பார்கள் என்று நம்புகிறேன். ஆக்ஸ்போர்டு, கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகங்களிற் படித்து வெளி யேறும் மாணவர், உலகில் புகழ் அடைதல் போல், இப்புதிய பல்கலைக் கழகத்திலிருந்து வெளியேறும் பட்டதாரிகளும் நாடு பாராட்டத்தக்க முறையில் முன்னேற வேண்டும். அவர்களுக்கு அத்தகைய மன உணர்ச்சியைப் பல்கலைக் கழகம் ஊட்ட வேண்டும். உலக மொழியாகிய ஆங்கிலத்துடன், நமது நாட்டுப் புகழ் வாய்ந்த மொழிகளான தமிழ் மொழி வடமொழிகள் இக்கழகத்தில் வளர்ச்சி பெறுதல் வேண்டும். நாடு உரிமை பெற்ற பின்னர் நமது விருப்பம் போல மேலும் நமக்கு ஏற்ற உயர்தரக் கல்வியை வளர்க்கலாம். "உயர்தரக் கல்விக்குப் பெருந்தொண்டு புரிந்த சர். அண்ணு மலைச் செட்டியாருக்கு வாழ்த்து. அவர் கொடை

யால் தோற்றமெடுக்கும் புதிய பல்கலைக் கழகம் தழைத்து ஓங்குக,'' என்று வாழ்த்தினர்.

**பானகல் அரசர்** அவர்கள், “சர். அண்ணாமலை அவர்களின் அறச்செயல் **வரலாற்றில் குறிக்கத் தக்கது**. அவரது உள்ளத்தின் விரிவும், ஈகைத் திறனும் உயர்ந்தவை. அவரைப் போல 40 லட்ச ரூபாய் கொடுத்த வள்ளலை இந்நாட்டிற் காண்பது அரிது. அவரது பெருங்கொடையைப் பாராட்டி அரசாங்கத்தாரும் பெரும்பொருள் உதவி செய்திருத்தல் போற்றத் தக்கது. அரசாங்கத்தினரும், பொது மக்களும் அவரது சீரிய அறச் செயலைச் சிறப்புறக் கொண்டாடுகின்றனர். கொடையிற் சிறந்த தனவணிகர் இதுவரை கோவில் திருப்பணிகளில் தம் பொருளை வாரிச் செலவிட்டனர். ஆயின், சர். அண்ணாமலையவர்கள், கலைக்கோவிலைக் கட்டி, நாட்டு மக்களது அறியாமை இருளைப் போக்க 40 லட்சம் உதவியது, மிகவும் சிறந்தது. இந்த அரிய செயலில் அவர் முதல்வரானார். அவரை எடுத்துக் காட்டாகக் கொண்டு தனவணிகப் பெருமக்களும், பிற செல்வரும் கலைக் கோவில்களை வளர்க்க முன் வருவாராக! வாழ்க வள்ளல் அண்ணாமலை! வாழ்க அவர் திருப்பெயர் கொண்டு தோன்ற இருக்கும் பல்கலைக் கழகம்!'' என்று உணர்ச்சிப் பெருக்குடன் பேசி முடித்தார்.

பின்னர், அண்ணாமலைப் பல்கலைக் கழகச் சட்டம், சென்னைக் கவர்னராலும், வைஸ்ராய் அவர்களாலும் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

மணல் வெளியாய்க் கிடந்த பெருந் திடல், கலைக்கூடமாகும் நற்காலம் வந்தது. அத்திடலிற்றான் அண்ணாமலைப் பல்கலைக் கழகம் தோற்றமெடுத்தது.

# 8. பரம்பரை ராஜா பட்டம்

அண்ணுமலைப் பல்கலைக் கழகம் சட்டமானவுடன் அண்ணுமலைச் செட்டியாரது கொடைத் திறம் இங்கிலாந்துவரை பரவியது. மன்னர் பிரான் மகிழ்ந்தார். சென்னை அரசாங்கத்தாரும், இந்திய அரசாங்கத்தாரும் செட்டியாரைப் பாராட்டிச் சிறப்பளிக்க விரும்பி, அவருக்குப் பரம்பரை ராஜா பட்டத்தை வழங்குமாறு மன்னர் பிரானிடம் சிபாரிசு செய்தனர். முன்னரே வள்ளலின் கொடைத் திறத்தைக் கேட்டறிந்த மன்னர் பெருமான், மட்டற்ற மகிழ்ச்சியுடன் பரம்பரை **ராஜா** பட்டத்தை வழங்கினுர். 3-3-1929-இல் சர். அண்ணுமலைச் செட்டியார் என்று அழைக்கப் பெற்ற வள்ளல், 4-3-1929-இல் ராஜா சர். அண்ணுமலைச் செட்டியார் என்று அனைவராலும் மகிழ்ச்சியுடன் அழைக்கப் பெற்ருர். தமிழராகிய இவர் பெற்ற சிறப்பு, இவர் அடைந்த பாராட்டு, தமிழராக வுள்ள நமக்குப் பெருமை தருவதன்ருே? 'வாழ்க ராஜா சர்!' என்று தமிழ் மக்கள் உளமார வாழ்த்தினர். இவர் வழித் தோன்றல்களுக்கு ராஜா பட்டம், பரம்பரையாக வந்து கொண்டிருக்கும். சர். அண்ணுமலைச் செட்டியார் ராஜா ஆனவுடன் அவருடைய மூத்த மைந்தரான முத்தைய செட்டியார் **குமார ராஜா** என்று அழைக்கப் பெற்ருர். இப்போது அவர், டாக்டர் ராஜா சர். முத்தைய செட்டியாராக விளங்குகின்ருர். கொடை அரசராகிய அண்ணுமலை வள்ளலுக்கு அரசர் என்னும் பட்டம் அளித்தது முற்றிலும் பொருத்தமானதே

யாகும். அவ்வமயம் அவர்களைப் பாராட்டி நான் பாடிய பாடல்களுள் ஒன்றில்,

> " மறத்தினுல் ஆகிய மன்னரைப் போலாது
> அறத்தினுல் ஆய அரசே "

என்று கூறி மகிழ் வெய்தினேன்.

3-6-29-இல் நடைபெற்ற அரசாங்க விருந் தொன்றில், சென்னைக் கவர்னர் கோஷன் அவர் கள், சர். அண்ணுமலைச் செட்டியாருக்கு ராஜா பட்டம் சூட்டி, அதற்குரிய சன்னதையும் கொடுத் தார். ராஜா அவர்களுடைய பெருமையைக் கருதி, அவர்களும், அவர்கள் மரபில் வரும் ராஜாக்களும் தம்மைக் காத்துக் கொள்வதற்காகக் கைத் துப்பாக்கி ஒன்றையும், துப்பாக்கி, ஈட்டி ஏந்திய பன்னிரண்டு வில்லைச் சேவகரையும் வைத்துக் கொள்ள அரசாங்கத்தார் இசைவு தந்தனர்.

## காரைக்குடிகாத்தானில் கண்கொள்ளாக் காட்சி

அண்ணுமலைச் செட்டியார் அரசர் பட்டம் பெற்றதிலிருந்து அடுத்த ஆண்டு ஜனவரி வரை அவருக்கு எங்கும் வரவேற்புகளும், புகழ்மாலை களும் அளிக்கப்பெற்றன. இவ் வரவேற்பு களில் நாம் முதன்மையாகக் கருதுவது அவர் பெற்ற உள்ளூர் வரவேற்பாகும். பெரும்பாலும் உள்ளூரார் தம் ஊரார் ஒருவரை மதிப்பது அருமை. ஆயின், நம் ராஜா அவர்கள் உள்ளூரில் சிறப்பாக மதிக்கப்பட்டார். காரைக்குடிகாத்தானில் வாழ்ந்த தனவணிகர் அனைவரும் 'ராஜா சர். அண்ணுமலைச் செட்டியார் வாழ்க!' என்று விண் ணதிர ஒலித்து, ராஜா அவர்களைக் காரைக்குடிகாத் தானில் வரவேற்றனர்; பூரண கும்பங்கள்

ஏந்தினர் ; மங்கல வாழ்த்தொலிகள் முழங்கின. முதலில் கோவில் மரியாதை நடந்தது. பின்னர் நகர மண்டபத்தில் பெருங்கூட்டங் கூடியது. இன்சுவை விருந்துக்குப் பின் புகழ் விருந்து பொலிந்தது. கானடுகாத்தான் நகரத்தார், தமிழில் பாராட்டுரை படித்தனர். கானடுகாத்தான் யூனியன் போர்டார், ஊரார் சார்பில் பத்திரம் ஒன்றை ஆங்கிலத்தில் படித்தளித்தனர். பத்திரங்கள் இரண்டும் இரண்டு வெள்ளிப் பேழைகளில் வைத்து ராஜா அவர்களுக்கு அளிக்கப்பெற்றன. அவற்றுள் தமிழ்ப் பாராட்டு இதழை மட்டும் இங்குத் தருகின்றேன். அது, மக்கள் ராஜா அவர்கள்பால் கொண்டிருந்த நன்மதிப்பைக் காட்ட வல்லது; மேலும், பாராட்டு இதழ் எழுதும் முறையினையும் உங்களுக்கு ஊட்ட வல்லது.

உ

சிவமயம்

கானடுகாத்தான்

கனம் ராஜா சர். சா. ராம. மு.

அண்ணாமலைச் செட்டியார் அவர்களுக்கு

**மேன்மை மிக்க ஐயா !**

**தங்கள் வரவு நல்வரவாகுக !**

**தங்கள் வாழ்நாள் வளர்ந்தோங்குக !**

அரசாங்கத்தார் தங்களை அரசரெனப் பட்டஞ் சூட்டிய பின்னர், முதன் முதலாக நீங்கள் பிறந்த இவ்வூர் புகும் இந்நாளைச் சிறந்த நன்னாளாகக் கருதுகிறோம். அரசருங் கண்டு வியக்கும் அறப் பணியும், திருப்பணியும் அளவிடற்கரியன செய்து

பெரும் புகழ் பெற்றுச் சிறந்து நிற்கும் நமது செல் வத் திருக்குலத்துத் தோன்றி, அறிவுந் திருவும் திறமையும் பெற்று விளங்கும் தங்கள் மேன் மையை யெண்ணி இன்புறுகின்றோம். செல் விருந்து ஓம்பி வருவிருந்து எதிர்நோக்கி, மலர்ந்த முகமும், நிறைந்த அன்பும், குளிர்ந்த சொல்லும் கொண்டு திகழும் உங்களை உபசரிக்க யாவரும் விரும்பி நிற்றல் இயற்கை யன்றோ ?

**மாநிலம் மெச்சும் வாணிகர் திலக !**

காணி காணியாக ஈட்டிக் கோடி கோடியாகத் தருமஞ் செய்யும் குலத்தாரெனப் பல்லோர் புகழும் நமது குலத்து உதித்துப் பொருளீட்டுந் துறையில் தலை சிறந்து, ஊக்கமும் உறுதியும் திறமையுங் கொண்டு, சலிப்பின்றிப் பல்வேறு தேசங்களில் பலப்பல வியாபார நிலையங்கள் கண்டு நிர்வகிக்கும் தங்கள் பேராற்றலை யெண்ணி யெண்ணி இறும்பூ தெய்துகிறோம். தொழில் நிலைகண்ட உங்கள் எழிலுறு மதியையும், நிகரற்ற பேராற்றலையும் உள்ளபடி அரசாங்கத்தார் உணர்ந்தன்றோ உங் களை இம்பீரியல் பாங்கின் கவர்னராகவும் அமைத்துக் கொண்டனர்.

**வரவொடு செலவிடும் வகையறி நிபுண !**

பொருளீட்டுந் திறமை மிக்குடையார் செல விட மனங்கொள்வதில்லை. செலவிட மனமுள் ளோர் பொருளீட்டுந் திறமை அடைவதில்லை என்பது உலகியற்கை. இவ்விரு திறமையையும் ஒருங்கே பெற்றுள்ள தங்கள் பேராற்றலைப் பாராட்டி மகிழ்கின்றோம்.

**உடலுயிர் வளமுற உதவுநற் பெரியோய்!**

தாங்கள் பிறந்த இந்நன்னகரில் பிறக்குங் குழந்தைகளும் அவற்றைப் பெறும் பெண்மணி களும் பிணிவாய்ப் படாது, சுகவாழ்வு வாழ்ந்து இன்பமடையும்படி நீங்கள் கண்டுள்ள "பெண் மக்கள்—குழந்தைகள் மருத்துவச்சாலை"யை இவ் வூர் மக்கள் என்றும் மறக்க முடியுமோ?

**கலைத்தாப மொழிக்கும் அண்ணுமலைத் தீபராஜ!**

"இன்னறுங்கனிச் சோலைகள் செய்தல், இனிய நீர்த்தண் சுனைக ளியற்றல், அன்ன சத்திரம் ஆயிரம் வைத்தல் ஆலயம் பதிறுயிரம் நாட்டல், பின்னருள்ள தருமங்கள் யாவும், பெயர் விளங்கி ஒளிர நிறுத்தல், அன்ன யாவினும் புண்ணியங்கோடி, ஆங்கோ, ரேழைக் கெழுத்தறி வித்தல்" என்ற வாக்குக் கேற்ப, சேர, சோழ, பாண்டியரெனும் முப்பெரு வேந்தரும் முறை செய்து வாழ்ந்த பழம் பெருந் தமிழ் நாட்டின் இக்கால நிலையுணர்ந்து, எல்லையற்ற பொருளை அள்ளி வழங்கிக் கல்விக்கொடி நாட்டிய வள்ளன் மையை உள்ளுந்தோறும், உள்ளுந்தோறும் உவகை வெள்ளம் ஊற்றெடுக்கின்றது.

**மன்னர் போற்றும் மாண்புறு தோன்றுல்!**

மாட்சி மிக்க மன்னர் பெருமான் தங்கள் பெருந் திறமை நோக்கி, முறையே ராவ்பகதூர், திவான்பகதூர், சர் என்னும் பல பட்டங்களை நல்கியதோடமையாது, மன்னர்கட்குரிய நறுங் குணங்கள் பலவும் திகழுந் தங்களையும், தங்கள் வழித்தோன்றல்களையும் மன்னர் குழுவிற்கு

உரிமையாக்குவதே சாலுமெனக் கண்டு, 'பரம் பரை ராஜா' பட்டம் வழங்கியமை குறித்து, அவர்கட்கும் நன்றி செலுத்துங் கட்டுப் பாடுடையோம்.

**கல்விப்பயிர் வளர்க்கும் கருணை முகிலே !**

நமது தனவணிக நாட்டின் நல் வளர்ச்சிக்கு இன்றியமையாத தேவையாக இருப்பது பெண் மக்கள் முன்னேற்றமாகும். எல்லா வகையாலும் புதிய உணர்ச்சி பெற்று, நன்முறையில் இன்ப வாழ்வு நடத்தித் தம்மையும், தமது நாட்டையும் முன்னேற்றுவிக்கும் பெண்மணிகளை உண்டாக்கு வதற்குரிய, உணவு வசதியோடு கூடிய பெண் மக்கள் கல்வி நிலையங்களைக் காண வேண்டியது, அறிவுந்திருவும் பெற்றோர் பெருங்கடமையாக இருக்கின்றது. இதனை நன்கு உணர்ந்த நீங்கள், இதற்கு வேண்டிய முயற்சி யெடுத்து, நம் நாட்டை முன்னேற்றுவிக்க முன் நிற்பீர்களென நம்பு கின்றோம்.

**தக்கார் புகழும் தனவணிக மணியே !**

அரசருங் கண்டு அதிசயிக்கும்படி நம் தன வணிக நன்மக்கள் எல்லையற்ற பொருளைச் செல விட்டுப் பல தருமங்கள் செய்திருக்கிறார்கள் ; எனினும், இக்காலத்துக்கு உபயோகமான வழி களிற் செலவிடுவதில்லை என்று குறை கூறியவருங் கண்டு வியக்கும்படி, நம் இந்திய நாட்டில் எவரும் கொடுத்தறியாத பெரும் பொருள் நல்கி, நம்மவர் காலத்துக்கேற்ற தருமஞ் செய்வதிலும் நிகரற்றவர் என்ற பெயரை நமது மரபிற்குத் தந்து, தமது

தரும குலப் பெருமையை நிலைநாட்டி, அரசர் பட்டத்தைத் தாங்கிப் பொதுவாக நமது சமூகத்தினருக்கும், சிறப்பாக நமதூர் நகரத்தாருக்கும் பெருமை தரும் தங்களை மனமார உபசரித்து வாழ்த்துவதைவிட வேறு என்ன கைம்மாறு இயற்ற வல்லோம் ?

இங்ஙனம்

விபவ ௵ பங்குனிமீ 23உ
5—4—29

தங்கள்பால் அன்புரிமை மிக்க

**கானாடுகாத்தான் நகரத்தார்.**

ராஜா அவர்கள், தமிழ்ப் பாராட்டுரைக்குத் தமிழிலும், ஆங்கிலப் பாராட்டுரைக்கு ஆங்கிலத்திலும் அடக்கமும், அன்பும் தோன்றப் பதிலளித்து, அனைவரையும் மகிழவைத்தனர் ; பின்னர்க் கோவில் மரியாதைகளுடனும், யானைகள், குடை கொடிகள் முதலிய சிறப்புக்களுடனும் ஏறத்தாழ ஐயாயிரம் பேர் வாழ்த்தொலி முழங்க, நகரத்தார் ராஜா அவர்களை ஊர்வலம் செய்வித்தனர் ; இரவு எட்டு மணிக்கு அவர்களது அரண்மனைக்கு அழைத்துச் சென்றனர். அங்கு வந்தவர் அனைவரையும் குமாரராஜா அவர்கள், வரவேற்று உபசரித்தார்கள். அன்று கானாடுகாத்தான் கண்கொள்ளாக் காட்சி அளித்தது.

### அடுத்த நாள், கோவிலூர்த் திருவிழா

கோவிலூர் என்பது சிவமும் திருவும் திகழும் ஊராகும். அங்கே தனவணிகர் அனைவருங் கூடித் தம் குலப் பொது வாழ்வைத் திட்டம் செய்வர். அவ்வூரில், தனவணிகர் அனைவர் சார்பிலும் ராஜா

அவர்களுக்கு ஏப்பிரல் 6-ஆம் தேதி வரவேற்பு அளிக்கப் பல ஆயிரக்கணக்கான மக்கள் கூடினர். நகரம் பொன்னகரமாக அலங்கரிக்கப்பட்டிருந்தது. தனவணிகப் பெருமக்கள் முந்நூறுபேர் வரவேற்புக் குழுவினராயிருந்து, இருபத்தையாயிரம் ரூபாய்ச் செலவில் எல்லா ஏற்பாடுகளேயும் மூன்று வாரங்களாகச் செய்து முடித்தனர். யாண்டும் மாவிலைத் தோரணங்களும், வாழையும், கமுகும் வளம் பெறக் காட்சி அளித்தன. தெருக்களிலெல்லாம் வரவேற்பு வளைவுகள் இனிய கருத்துக்களுடன் துலங்கின. கோவிலூர் வெளி வாசல் வளைவில், " காரைக்குடிகாத்தான் கவின் ராஜ சீமானை, மாநாட்டுக் கோட்டையார் மகிழ்ந் தழைக்கும் நல்வழியே " என்ற சொற்றொடர் காணப்பட்டது.

கோவிலுக்கு அருகில், அரசர் அவர்களை வர வேற்க அமைக்கப்பட்ட கவினுறு கொட்டகை காட்சியளித்தது. கோவில் ஒப்பனைகள் செய்வதில் சிறந்த தனவணிகர், தங்கள் ராஜாவை வரவேற்கச் செய்த ஒப்பனையைப் பற்றிக் கூறவும் வேண்டுமோ?

வரவேற்புக்கென்று அமைக்கப்பட்ட கொட்டகையில், மாலை நான்கு மணியளவில், பெருமக்கள் பலருங் கூடிவிட்டனர். யாண்டும் எள் இட இடமின்றி மக்கள் கூட்டம் கடலெனக் காட்சியளித்தது. மாலை மணி 4-20 அளவில், செட்டி நாட்டரசர், ரைட் ஆனரபிள் வி. எஸ். சீநிவாச சாஸ்திரியாருடன் காரைக்குடிகாத்தானிலிருந்து கோவிலூரை யடைந்தார். வழிநெடுக மக்கள் வாழ்த்தொலி முழங்கிய வண்ணம்

நின்றனர். கோவிலூர், செட்டிநாட்டரசருக்குக் குதூகல வரவேற்பை வழங்கியது. அவர் வர வேற்புக் கொட்டகைக்குள் நுழைந்தவுடன் மக்கள் மலர்மழை பொழிந்தனர்; விண்ணதிர வாழத்தினர். மேடையில் எண்ணிறந்த மலர் மாலைகளுக்கு இடையே செட்டி நாட்டரசர் அமர்த்தப்பட்டார். அவரைச் சுற்றி இராமநாதபுரம் அரசர், புதுக் கோட்டை திவான், புதுக் கோட்டை நீதிபதிகள், சென்னை நகர் மன்றத் தலைவர் சர். ஏ. இராமசாமி முதலியார், சர். மு. சித. முத்தைய்ய செட்டியார், சர். பி. டி. ராஜன், திவான் பகதூர் அ. மு. மு. முருகப்ப செட்டியார், மகாமகோபாத்தியாய பண்டித மணி மு. கதிரேசன் செட்டியார் போன்ற பெருமக்கள் அவையை அலங்கரித்தனர். அறு சுவை உண்டிக்குப் பின்பு சொல் விருந்து தொடங்கப் பெற்றது. ரைட் ஆனரபிள் சீநிவாச சாஸ்திரியார் தலைமை தாங்கினர். அவருடைய பாராட்டுக்குப் பின்பு திவான் பகதூர் தீ. அ. முத்தைய செட்டியார் எழுந்து தனவணிகர் சார் பில் பெரிய பாராட்டுரை ஒன்றைப் படித்து, அதனை இருநூறு பவுனில் அரிய வேலைப்பாடு களுடன் செய்யப் பெற்ற தங்கப் பேழையில் வைத்து, மங்கல ஒலிக்கிடையே ராஜா அவர்கள் கைகளில் கொடுத்தார். எண்ணிறந்த மலர்மாலை களுக்கிடையே அரசரது புன்முறுவல் கொண்ட முகம் மட்டுமே தெரிந்தது. பின்னர் சர். ஏ. இராம சாமி முதலியார் ஆங்கிலத்திலும் பண்டிதமணி முதலியோர் தமிழிலும் இனிமையாகவும், அழகாக வும் அரசர் அவர்களைப் பாராட்டிப் பேசினர். பின் தலைவர் சாஸ்திரியார், அரிய செயலுக்கு அரிய

பரிசு எனக் கூறி, அரசர் அவர்களுடைய அறச் செயல்களையும், உயர்ந்த பண்புகளையும் பாராட்டி வாழ்த்தினர். அரசர் எழுந்து, அகம் குழையப் பேசி, வரவேற்பளித்துத் தம்மைச் சிறப்பித்த தன வணிகர் அனைவருக்கும் நன்றி கூறினர். கூட்டம் இனிது நிறைவேறிற்று.

### தில்லை முதலிய இடங்கள்

தில்லையில், 12–4–29-இல், ராஜா அவர்களைப் பாராட்ட நகர சபையினர் ஒன்று கூடினர். அன்று இரவு கூத்தப் பெருமான் தரிசனம் செய்வித்துத் தில்லை வாழ் அந்தணர்கள், செட்டி நாட்டரசரை ஆயிரக்கால் மண்டபத்தில் இருத்தி, மலர் மாலைகள் சூட்டி உபசரித்தனர் ; வடமொழியில் பாராட்டுரை ஒன்றை வழங்கினர்.

பின்னர்த் தொடர்ச்சியாகப் பல இடங்களில் வரவேற்புக்கள் நடைபெற்றன. கொழும்பு நகரில் குதூகல வரவேற்புக் கிடைத்தது ; கொழும்பில் ராஜா அவர்களுக்கு வாழ்த்திதழ் அளித்தவர்களுள் யானும் ஒருவன். அப்போது பதினன்கு ஆண்டு இளைஞனயிருந்த என் வாழ்த்தை அரசர் பேரன்புடன் ஏற்று, என் ஆசிரியருக்கு என் ஒவ்வொரு பாடலுக்கும் ஒவ்வொரு தங்கப் பவுன் பரிசாக வழங்கினர்கள். இதுவும் இவருடைய வள்ளன்மை வகைகளில் ஒன்று. பர்மா, மலேயா முதலிய கடல் கடந்த நாடுகளிலும் செட்டி நாட்டரசரைப் பாராட்டத் தமிழர் திரண்டனர். அவர்கள் அழைப்பிற்கு இணங்கி அரசரும் சென்றர். அவர்கள் மனம் உவந்து அளித்த பாராட்டுக்களை உளம் குளிர ஏற்றுக்கொண்டார்.

### சென்னைப் பல்கலைக் கழக டாக்டர் பட்டம்

இங்ஙனம் பலரும் பாராட்டுவதற்கு அடிப் படைக் காரணமாகிய, பிறர் செய்தற்கு அரிய கல்வித் தொண்டு புரிந்த ராஜா அவர்களைத் தானும் பாராட்டுவது கடமை எனக் கருதிச் சென்னைப் பல் கலைக் கழகம் 3-8-1932-இல் எல். எல். டி. (LL.D.) என்னும் டாக்டர் பட்டத்தை ராஜா அவர்களுக்கு வழங்கியது. அப்பொழுது சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தராயிருந்த சர். கே. ராமுண்ணி மேனன், ராஜா அவர்களின் தொண்டுகளை நன்கு விளக்கிப் போற்றினர்.

### அடையாற்று அரண்மனை

இவ்வாறு பலவகையாலும் சிறப்பெய்திய செட்டி நாட்டரசர் சென்னையிலேயே நிலையாகத் தங்க முடிவு செய்துவிட்டமையால், தக்க இடத்தில் அரண்மனை கட்டத் துணிந்தார். சென்னையில் அடையாறு கடலொடு கலக்கும் அகன்ற இடத்தில், 110 ஏக்கர் நிலம் வாங்கினர்; இருபது லட்சம் ரூபாய் செலவிட்டுக் கண்கவர் அரண்மனையைக் கவினுறக் கட்டி முடித்தார். மாளிகையைச் சூழப் பசும்புல் தரையும், மலர்ச் செடிகளும் விழிகளுக்கு விருந்து அளிக்கின்றன. நடை வழிகள் நன் முறை யில் அமைந்து உள்ளன. வழிகளின் இருபுறங்களி லும் நிழல் தரும் மரங்கள் வளர்க்கப்பட்டுள்ளன. உள் நுழைந்து செல்லுகையில் செட்டிநாட்டரச ரின் அரண்மனை கம்பீரமாகக் காட்சி அளிக்கின் றது. யாண்டும் பளபளப்பான சலவைக்கல் அமைப்பு, அரண்மனையின் அழகை உயர்த்திக் காட்டுகின்றது. ராஜா அவர்களின் உள்ளத் தூய்

மையை உணர்த்துவது போலவே செட்டிநாட்டு அரண்மனையும் தூய்மையாகக் காணப்படுகின்றது. இன்றும் சென்னையைக் காணச் செல்பவர்கள், சென்னையில் காணத் தக்கவைகளுள் ஒன்றாக இவ்வரண்மனையைக் கண்டு களிக்கின்றனர்.

அரசர் அவர்கள், உதகமண்டலத்தில் அமைத்துள்ள மாளிகையும் இவருடைய அறிவாற்றலைத் தெள்ளிதிற் காட்டுவதாகும்.

## செட்டிநாடு

திருச்சிராப்பள்ளியில் இருந்து மானாமதுரைக்குப் புகைவண்டி போகும் வழியில், **செட்டிநாடு** என்று ஒரு புகைவண்டி நிலையம் இருக்கிறது. அது உண்டாகச் செய்தவர் நம் வள்ளல் அண்ணாமலைச் செட்டியாரே ஆவர். இவர், அங்கு ஆயிரம் ஏக்கருக்கு மேற்பட்ட நிலம் வாங்கிப் பண்படுத்தி, அப்பகுதிக்குச் செட்டிநாடு என்று பெயர் வழங்கினார்; அப்பகுதியில் சாலைகளையும், சோலைகளையும் உண்டாக்கினார்; விளை நிலங்களை வளப்படுத்தினார்; பல வீடுகள் கட்டி மக்கள் வாழ்வதற்கு வேண்டும் வசதிகளைச் செய்தார். புகைவண்டி நிலையத்தை அடுத்து இவர் தங்குவதற்கென்று ஒரு மாளிகை அழகாக அமைக்கப்பட்டது; அதன் எதிரில் விருந்தினர் மாளிகை ஒன்றும் கட்டப்பட்டது; அண்மையில் விநாயகர் கோவில் ஒன்று எழுந்தது; தொடக்க நிலைப் பள்ளி ஒன்று தோற்றமெடுத்தது. புகைவண்டி நிலையத்தில் இருந்து இரண்டு பர்லாங்கு தூரம் கிழக்கே சென்றால், அங்கு அழகு மிகுந்த மாளிகை ஒன்று காட்சியளிக்கும்; அது, சர். அண்ணாமலைச் செட்டியார்

ஓய்வு கொள்வதற்காகக் கட்டப்பட்ட மாளிகை யாகும். அங்கிருந்து வடக்கு நோக்கி ஒரு பர் லாங்கு தூரம் செல்லின், சிறு குன்றுபோல உயர்ந்து நிற்கும் எழில்மிக்க மாளிகை ஒன்றைக் காணலாம்; அதைச் சுற்றிலும் அகழ் ஒன்று காட்சி யளிக்கின்றது; அவ்வகழின் ஒரு மூலேயில் தோணி நிலேயம் கட்டப்பட்டுள்ளது. மாலே நேரங்களில் தோணியில் அமர்ந்து அகழைச் சுற்றி வருதல் இன்பத்தைத் தரும். செட்டிநாட்டில் சிவன் கோவில் ஒன்றும் செம்மையாகக் கட்டப் பெற்றுள்ளது.

செட்டிநாட்டு அரசர், தாம் அரசராதற்கு ஏற்ப, நாடு (செட்டிநாடு), நகர் (அண்ணுமலே நகர்), அரண்மனே (அடையாற்று அரண்மனே) முதலியவைகளேப் பிறர் நினேக்கவும் இயலாத அழகிய முறையில் அமைக்கும் அறிவு நுட்பத்தி லும் அரசராகவே விளங்கிஞர்.

இவருடைய இடையருத முயற்சியாலும், ஆதரவாலும் உருவாகி வளர்கின்ற அண்ணுமலே நகரையும், பல்கலேக் கழகத்தையும் ஒவ்வொரு பிரி வாக இனிப் பார்ப்போம்.

# 9. அண்ணுமலே நகர்

செட்டிநாட்டரசர் நிறுவிய மீனுட்சி கல்லூரியின் மதிப்பு இருபது லட்சம்; பின்னர் அண்ணுமலேப் பல்கலேக் கழகத்திற்குக் கொடுத்த தொகை இருபது லட்சம். மேலும் கட்டடங்களுக்காகவும் பரிசுகளுக்காகவும் நன்கொடையாக இவர் வழங்கிய தொகைகளேயும் சேர்த்தால் அரைக்கோடி ரூபாய்க்குக் குறையாது. சென்னே அரசாங்கத்தார் அண்ணுமலேப் பல்கலேக் கழகத்திற்கு நிலேப் பொருளாகவும், கட்டடங்களுக்காகவும் இருபத்தேழு லட்சமும், ஆண்டு தோறும் ஏற்படும் செலவுக்காக ஒன்றரை லட்சமும் உதவுவதாக வாக்களித்தனர்; வாக்களித்தபடியே செய்தனர். மீனுட்சி கல்லூரி நூறு ஏக்கர் நிலத்தில் அமைக்கப்பட்டது. பின்னர் அரசர், 168 ஏக்கர் நிலம் வாங்கி உதவினுர். அதன்பின் பல்கலேக் கழகம் 304 ஏக்கர் நிலம் வாங்கியது. ஆக 572 ஏக்கர் கொண்ட அகன்ற நிலப் பகுதிதான் **அண்ணுமலே நகர்** ஆயிற்று. இனி, நாம் அப்பொன்னகரைக் காண்போம்.

### கல்லூரிக் கட்டடங்கள்

சிதம்பரம் புகைவண்டி நிலேயத்திலிருந்து கிழக்கில் பார்ப்பின் அண்ணுமலே நகர் கண்ணிறைந்த காட்சி அளிக்கும். அத்திசை நோக்கி அழகிய வழியில் ஏறத்தாழ மூன்று பர்லாங்கு தூரம் சென்ருல், வழியின் வலப்புறம் பல்கலேக் கழகத் துணே வேந்தரது மாளிகை காணப்படும். அதனேச் சுற்றிலும் கண்ணேக் கவரும்

பசுமைக் காட்சி காண்பவரைத் தன்வசப் படுத்தும். அங்கிருந்து நேரே செல்லின் ஒரு தனிப் பெருவீரனைப் போல நிமிர்ந்து நிற்கும் கலைக் கூடம் காட்சி அளிக்கும். அதுவே பல் கலைக் கழகத்தின் நடு நாயகமான கட்டடம்



அண்ணுமலைப் பல்கலைக் கழகம் (ஆர்ட்ஸ் பிளாக்)

(Arts Block). அங்கே தத்துவம், தாவரம், கணிதம் ஆகியவை கற்பிக்கப்படுகின்றன. அக்கட்டடத்திற்கு வடபால் விஞ்ஞானக் கட்டடமும் (Science Block), விஞ்ஞான ஆராய்ச்சிக் கூடங்களும் அமைந்துள்ளன. பௌதிகம், இரசாயனம், தாவரம், உயிர்நூல்கள் கற்பதற்குரிய வசதிகள் அங்கு மிகுதியாக அமைந்துள்ளன. இத்தகைய வசதிகள் பெற்ற சிறந்த ஆராய்ச்சிக் கூடம் நமது மாகாணத்தில் வேறு இல்லை என்னலாம்.

### தமிழ்—வடமொழிக் கல்லூரிகள்

விஞ்ஞானக் கட்டடத்திற்குத் தெற்கே தமிழுக்கும் வடமொழிக்கும் அமைந்த பெரிய கட்டடம் (Oriental Block) காணப்படும். அங்கே தமிழில், புலவர், பி. ஏ. ஆனர்ஸ்., பி. ஒ. எல், எம். ஒ. எல், ஆசிரியப்பயிற்சி, வித்துவான் முதலிய வகுப்புக்களும், வடமொழியில் சிரோமணி, பி. ஏ. ஆனர்ஸ், ஆசிரியப்பயிற்சி முதலிய வகுப்புகளும் நடைபெறுகின்றன. இக்கட்டடத்தின் மேல்மாடியில் ஆங்கிலம், சரித்திரம், பொருளாதாரம் ஆகியவை கற்பிக்கப் பெறுகின்றன.

இப்பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பகுதி, கலைத்துறை, கீழ்த் திசைக் கல்வித்துறை, ஆராய்ச்சித் துறை என மூன்று பிரிவாக உள்ளது. ஆராய்ச்சிப்பகுதியின் வாயிலாகப் பல அரிய நூல்கள் வெளிவந்துள்ளன. இன்னும் பல நூல்கள் வெளிவரவிருக்கின்றன. தமிழ் ஆராய்ச்சிப் பகுதிக்காகவும், ஆசிரியப் பயிற்சிப் பகுதிக்காகவும் புதியதொரு பெரிய கட்டடம் கட்டப்பெறுகின்றது.

### இசைக் கல்லூரி

திருவேட்களம் கோவிலுக்கு அருகில் இசைக் கல்லூரிக் கட்டடம் இலங்குகின்றது. அங்கே தமிழிசை கற்பிக்கப்படுகின்றது. வாய்ப்பாட்டு, வீணை, பிடில், மிருதங்கம், தேவாரம் ஆகிய பிரிவுகள் உள்ளன. இசைக் கல்லூரிகளில் முதன்மையானது அண்ணமலைப் பல்கலைக் கழக இசைக் கல்லூரியே ஆகும்.

இயற்றமிழ், இசைத் தமிழ் வளர்ச்சிக்காகத் திருப்பனந்தாள் காசி மடத்துத் தலைவர்களான

ஸ்ரீலஸ்ரீ சாமிநாதத் தம்பிரான் சுவாமிகள் அவர்களும், ஸ்ரீலஸ்ரீ அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களும் ஏறத்தாழ இரண்டரை லட்சம் ரூபாய் மதிப்புள்ள நிலங்களையும், தொகையையும் இப் பல்கலைக் கழகத்திற்கு நன்கொடையாக வழங்கியிருப்பது போற்றுதற்குரியது.

**எஞ்சினீரிங், டெக்னலஜி கல்லூரிகள்**

சிதம்பரம் புகைவண்டி நிலையத்துக்கு அருகில், எஞ்சினீரிங் டெக்னலஜி கல்லூரிகளின் மிகப் பெரிய கட்டடம் ஒன்றும், அதனை அடுத்துப் பல சிறிய கட்டடங்களும் காட்சி அளிக்கின்றன. அங்கே சிவில், மெக்கானிக்கல், எலக்ட்ரிக்கல் ஆகிய எஞ்சினீரிங் வகுப்புகளும், டெக்னலஜி வகுப்பும் நடைபெறுகின்றன. அவ்வகுப்புக்களுக்கு வேண்டும் கருவிகள், பெரும் பொருட்செலவில் வாங்கி வைக்கப்பெற்றுள்ளன. டெக்னலஜி கல்லூரிக்கு டாக்டர் ராம. அழகப்ப செட்டியார் அவர்கள் ஐந்து லட்ச ரூபாய் நன்கொடை அளித்திருப்பதும், எஞ்சினீரிங் கல்லூரி மாணவர் இல்லத்துக்குத் திருவனந்தபுரம் மகாராஜா அவர்கள் ஒரு லட்ச ரூபாய் நன்கொடை அளித்திருப்பதும் பாராட்டத்தக்கன. கல்லூரிக் கட்டடங்களுக்கு அருகில் இக்கல்லூரி மாணவர் தங்கவும், உணவு அருந்தவும் ஏற்ற இல்லங்கள் இரண்டு இருக்கின்றன. அவற்றுள் ஒன்றுக்குத் "திருவாங்கூர் மாணவர் இல்லம்" எனவும், மற்றொன்றுக்குச் செட்டிநாட்டு அரசி அவர்கள் நினைவாக "இராணி சீதை ஆச்சி மாணவர் இல்லம்" எனவும் பெயரிடப் பெற்றுள்ளன. இவை மூன்றடுக்கு மாளிகை

களாகும். இவற்றில் நானூறு மாணவர்வரை தங்கியுள்ளனர்.

**உடற் பயிற்சி வெளி**

பட்டமளிப்பு மண்டபத்திற்கு வடபால் உள்ள அகன்ற வெளியே மாணவர் உடற் பயிற்சி செய்யும் இடமாகும். மாணவர் பந்தாட்டம் முதலிய பலவகை ஆட்டங்களை மனங்குளிர ஆடி உடல் உரம் பெறுகின்றனர்; பெரிய நீர்த் தடத்தில் படகு ஓட்டும் பயிற்சியும் பெறுகின்றனர். செட்டி நாட்டரசர் விளையாட்டுக்களுக்குப் பலவகைப் பரிசுகள் வைத்துள்ளார்.

**படைப் பயிற்சி**

முற்காலத்தில் நம் தமிழர் சிறந்த வீரர் களாய்த் திகழ்ந்தமையை நூல்கள் வாயிலாக அறிகிறோம். இக்காலத்தும் சிலர் சிறந்து விளங்கு கின்றார்கள். ஆயினும் காலப் போக்கில் படைப் பயிற்சி குறைந்தது. இப்போது நம் நாடு விடுதலை பெற்று விட்டமையால், நம்மை நாம் காத்துக் கொள்வதற்குப் படைப் பயிற்சி இன்றியமை யாதது என்பதை நம் அரசாங்கத்தார் வற்புறுத்தி அதற்கு வேண்டும் உதவிகள் செய்கின்றார்கள். அப்பயிற்சி, இப் பல்கலைக் கழகத்திலும் நடை பெறுகின்றது. தக்க வீரர்கள் பயிற்றுவிக்கின்றார் கள். பல மாணவர் சேர்ந்து ஊக்கத்துடன் பயில் கின்றார்கள்.

**நூல் நிலையம்**

ஆர்ட்ஸ் பிளாக்கின் வட மேற்கில் உள்ள முதல் கட்டடம், பல்கலைக் கழக நூல் நிலையக்

கட்டடமாகும். அங்கே லட்சத்துக்கு மேற்பட்ட நூல்கள் இருக்கின்றன. உலக நாடுகள் அனைத்திலும் வெளியாகியுள்ள வரலாற்று நூல்கள், விஞ்ஞான நூல்கள், கணித நூல்கள், உயிர் நூல்கள், தமிழ் நூல்கள் முதலிய பல துறை நூல்கள் மிக்க அழகாக அடுக்கப்பட்டுள்ளன. மாணவ மாணவியர் இந்நூல்களை நன்கு பயன்படுத்துகின்றனர். இந் நூல் நிலையம் அறிஞர் பலராலும் போற்றப்பெற்றுள்ளது. இப்பெரிய பொது நூல் நிலையம் அன்றி, ஒவ்வொரு பாடப் பிரிவுக்கும் தனித்தனி நூல் நிலையங்களும் இருக்கின்றன.

## பட்டமளிப்பு மண்டபம்

பல்கலைக் கழகம் என்றால், பட்டம் அளிப்பு மண்டபம் ஒன்று இருக்கவேண்டும். இது அண்ணாமலை நகரில் மிகப் பெரிதாகவும், அழகாகவும் அமைந்துள்ளது. இது இந்தியாவில் உள்ள சிறந்த கட்டடங்களில் ஒன்று. அணியணியான குஷன் சேர்களும், பிற இருக்கைகளும் அங்கே அமைக்கப்பட்டுள்ளன. கூத்தப்பிரான், கோவிந்தராசர் திருவுருவங்களும் அம்மண்டபத்தில் காட்சி அளிக்கின்றன. அங்கே நாட்டிற் புகழ்பெற்ற பேச்சாளர்களும், பேரறிஞர்களும், அமைச்சர்களும், கவர்னர்களும் செய்துள்ள சொற்பொழிவுகள் பல. பல நூற்றுக்கணக்கான மாணவ மாணவியர் தங்கள் வாழ்க்கைக்கு அடிப்படையான பட்டங்கள் பெறும் மாளிகை அதுவே.

அதன் மேற்கில் செனேட் ஹாலும் பல்கலைக் கழக அலுவலகங்களும் உள்ளன.

### கலை, அறிவியல் மாணவர் இல்லம்

மாணவர் தங்கி இருப்பதற்குரிய அறைகளைக் கொண்ட இரண்டடுக்குக் கட்டடங்கள் பல இலங்குகின்றன. இவை, நற்காற்றும் நல்வெளிச்சமும் கொண்டவை. இவற்றிற்குத் திருவள்ளுவர், இளங்கோ, சேக்கிழார், கம்பர், பாரதியார் ஆகிய புலவர் பெருமக்களின் பெயரிடப் பெற்றுள்ளன.

இவற்றை அடுத்து மாணவர் உணவுச் சாலைகளும் பல உள்ளன. இவ்வாறே மாணவியர் தங்கவும், உணவு அருந்தவும், விளையாடவும் தக்க தனி இல்லமும் வேறோரிடத்தில் விளங்குகின்றது. இவ்வில்லங்களில் ஆயிரத்திருநூறு மாணவர் வரை தங்கி உள்ளனர்.

### கோகலே மண்டபம்

பல்கலைக் கழக மாணவ மாணவியர்களுக்குப் பலவகை மன்றங்கள் உள்ளன. ஒவ்வொரு மன்றத்தின் சார்பிலும் கூட்டம் கூடிப் பேசுவதற்கென்று தனி மண்டபம் ஒன்று மாணவர் இல்லத்துக்கு அருகில் இருக்கின்றது. அது சொல்லின் செல்வரும், கல்விக்கு உழைத்த உத்தமரும் ஆகிய கோபால கிருஷ்ண கோகலே பெயரைத் தாங்கியுள்ளது. தமிழ்நாட்டுப் பேச்சாளர் பலர், அம் மண்டபத்தில் சொன்மாரி பொழிந்து வருகின்றனர்.

### விவசாயக் கல்லூரி

கோகலே மண்டபத்திற்குத் தென்பால் பயிர்த் தொழிற் கல்விச்சாலை விளங்குகின்றது. இதன் தொடர்பாய் மாணவர் பயிற்சி பெறுவதற்காகப்

பயிர்த்தொழிற் பண்ணை, அண்ணுமலை நகருக்குக் கீழ்பால் பரந்த வயல் வெளியில் அமைந்துள்ளது. அங்கே புதிய முறையைத் தழுவிப் பயிர்த்தொழில் செய்யப் பெறுகின்றது.

ஆசிரியப் பயிற்சி, கிராம சமூக நலக் கல்வி, வாணிகக் கல்வி, நிலநூல், புள்ளிவிவரக்கணக்கு, ஓவியக் கலை, நாடகக் கலை முதலிய பலதுறைக் கல்விகளும் இப்பல்கலைக் கழகத்தில் பல்வேறிடங் களில் கற்பிக்கப்பட்டு வருகின்றன.

## பிற கட்டடங்கள்

அண்ணுமலை நகரில் அஞ்சல் நிலையம் இருக் கின்றது. மிக்க வசதிகளுடன் மருத்துவச்சாலை ஒன்றும் விளங்குகின்றது. தக்கவர்களை வரவேற்று உபசரிக்க இரண்டு விருந்து மாளிகைகளும் அழ காகத் திகழ்கின்றன. அங்கு ஐரோப்பிய முறை யிலும், இந்திய முறையிலும் விருந்து அருந்த வசதிகள் செய்யப்பட்டுள்ளன.

விருந்தினர் விடுதிக்கு அருகில் வடபுறத்தில் ஐந்து புதிய கட்டடங்கள் கட்டப்பெற்றுள்ளன. அவைகளில் பலதுறை கல்விகள் கற்பிக்கப்படு கின்றன. மாணவியர் இல்லத்துக்கு அருகில் மகளிர் கழகக் கட்டடம் ஒன்றும் கவினுறத் திகழ் கின்றது.

## ஆசிரியர் வீடுகள்

அஞ்சல் நிலையத்தை அடுத்தும், திருவேட் களக் திருக்கோவிலுக்கு அருகிலும், மாணவர் இல்லத்துக்குப் பின்புறமும், துணைவேந்தர் மாளி கைக்கு மேற்கிலும், எதிர்புறத்திலும் பல்கலைக்

கழக ஆசிரியர்களுக்கு வீடுகள் கட்டப்பட்டுள்ளன. அவரவர் சம்பளத்திற்கேற்றவாறு வீடுகள் அமைந்துள்ளன. எல்லா வீடுகளும் மிக்க வசதியுடன் கூடியவை.

பல்கலைக் கழக அலுவலகத்தாருக்கும், ஏவலாளர்களுக்கும் தனித்தனி வீடுகளும் தக்கவாறு உள்ளன.

## தண்ணீரும் விளக்கும்

அண்ணாமலை நகருக்குக் காவிரிநீர் கொண்டு வந்து சுத்தம் செய்யப்பெற்றுக் குழாய்கள் மூலம் எல்லோருக்கும் பயன்படுத்தப்படுகிறது. பெரும் பகுதிகளில் கிணறுகளும் தோண்டப்பட்டுள்ளன. சுருங்கக் கூறின், அண்ணாமலை நகரில் தண்ணீருக்குக் குறைவில்லை என்னலாம். இந்நகரத்தின் கழிவுநீர் முழுதையும் தரைக்குள்ளே பதிப்பிக்கப்பட்டுள்ள குழாய்களின் வழியாக அப்புறப் படுத்துதற்குரிய ஏழு லட்ச ரூபாய்த் திட்டம் நிறைவேறி வருகின்றது. இந்நகர் முழுதும் மின்சார விளக்குகள் சுடர் விட்டு ஒளிர்கின்றன. வடக்கிலிருந்தும், தெற்கிலிருந்தும் வரும் அல்லது போகும் புகைவண்டிகளிலிருந்து இராக் காலங்களில் அண்ணாமலை நகரில் மின் விளக்குக் களைக் காண்பது மகிழ்ச்சி தருவதாகும்.

## உயர்நிலைப் பள்ளி

ஆசிரியர்களுடைய பிள்ளைகளுக்கு ஒரு தொடக்கப் பள்ளியும், உயர்நிலைப்பள்ளியும் ராஜா அவர்களால் நிறுவப்பட்டுள்ளன. அப்பள்ளிகளில் சுற்றுப்புறச் சிற்றூர்களிலிருந்தும் பிள்ளைகள்

வந்து படிக்கின்றனர். உயர்நிலைப் பள்ளி அந் நகரில் நிறுவப்படுமுன் மாணவர்கள் நாள்தோறும் சிதம்பரம் சென்றே கல்வி கற்றுவந்தனர். அதனால் அவர்கள் நாள்தோறும் பல கல் தொலை போய்வர வேண்டியவராயினர். இப்பொழுது அத்துன்பம் இல்லை. அதனால் மாணவர்கள் செட்டிநாட் டரசரைத் தங்கள் மனமார வாழ்த்திப் போற்று கின்றனர்.

### திருவேட்களக் கோவில்

திருவேட்களச் சிவன் கோவில் பாடல் பெற்ற தென்பது முன்பே கூறப்பட்டதன்றோ? அத் திருக் கோவிலை அரசர் புதுப்பித்தார்; அக்கோவில் முன் புள்ள திருக்குளத்தையும் நன்கு செப்பனிட்டார். ஆசிரியரும், மாணவரும் நாள்தோறும் அங்குச் சென்று வழிபடுகின்றனர். திருக் கோவில் பிற கோவில்களில் காணுதற்கரிய தூய்மையுடன் என்றும் திகழ்வது சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது.

### அழகிய காட்சி

அண்ணாமலை நகரில் உள்ள நடைவழிகள் செவ்வையாக அமைக்கப்பட்டுள்ளன; நன்கு பாதுகாக்கப்படுகின்றன. நகரில் அங்கங்குப் புதிய பொழில்கள் தோற்றமெடுக்கின்றன; தோட்டங் களும் புதியனவாக அமைக்கப்படுகின்றன. இவை களையும் கட்டடங்களையும் அவ்வப்போது பேணும் அலுவலகப் பிரிவுகளும் தனித்தனியே உள்ளன. சேய்மையிலிருந்து காணினும் அண்மையிலிருந்து காணினும் அண்ணாமலை நகர், உள்ளத்தை மகிழ் விக்கும் அழகிய காட்சியை அளிக்கின்றது. நேரே காண்பவரே அக்காட்சியின்பத்தை நுகரக்கூடும்.

## இன்றைய நிலை

அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் இப்போது இரண்டாயிரவருக்கு மேற்பட்ட மாணவ மாணவியர் கல்வி பயில்கின்றனர். இப்பல்கலைக் கழகத்துக்குச் சென்னை அரசாங்கத்தார் ஏழு லட்ச ரூபாயும் இந்திய அரசாங்கத்தார் ஒன்றே கால் லட்ச ரூபாயும் ஆண்டுதோறும் உதவுகின்றனர். பல்கலைக் கழகத்தின் மூலதனம் கட்டடங்கள் முதலியவற்றின் இன்றைய மதிப்பு ஒன்றரைக் கோடி ரூபாய்க்கு மேல் ஆகலாம். அறிவாற்றல்களிலும் அனுபவத்திலும் சிறந்த திரு டி. எம். நாராயணசாமிப் பிள்ளை அவர்கள், இப்போது பல்கலைக் கழகத்தின் துணைவேந்தராய்ச் சீரிய முறையில், இதன் நலன்களைப் பேணி வளர்த்து வருகின்ருர்கள். இவர்களுக்கு முன் இப் பல்கலைக் கழகத் துணை வேந்தராய்த் திகழ்ந்தவர்களின் பெயர்களையும் கீழே குறிப்பிடுகின்றேன்.

1. டாக்டர் சர் எஸ். ஈ. அரங்கநாதன்
2. மகாகனம் வி. எஸ். சீநிவாச சாஸ்திரியார்
3. டாக்டர் சர். கே. வி. ரெட்டி நாயடு
4. திரு எம். இரத்தினசாமி
5. டாக்டர் எஸ். ஜி. மணவாள ராமாநுஜம்
6. டாக்டர் சர். ஆர். கே. சண்முகம் செட்டியார்
7. டாக்டர் சர். சி. பி. இராமசுவாமி ஐயர்

## வெள்ளிவிழா

இப் பல்கலைக் கழகத்தின் வெள்ளிவிழா, 1955-ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் 9-ஆம் நாள்

அண்ணமலை நகரில், மைசூர் மாநில மன்னர் மாண்புமிகு ஜெயசாமராஜ உடையார் பகதூர் அவர்கள் தலைமையில், மிகவும் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது ; பல்லாயிரக் கணக்கான மக்கள் விழாவில் கலந்துகொண்டனர். பல்கலைக் கழகம் நிறுவிய அண்ணமலை அரசர் அவர்களின் உருவச்சிலைத் திறப்பு விழாவும் அவர்களுடைய வாழ்க்கைத் துணைவியார் செட்டிநாட்டரசி இராணி சீதை ஆச்சி அவர்கள் பெயரால் அமைந்த பொறி யியற் கல்லூரி மாணவர் இல்லத் திறப்பு விழாவும், சிறப்புப் பட்டமளிப்பு விழாவும், துணைவேந்தர் டாக்டர் சர். சி. பி. இராமசுவாமி ஐயர் நூல் நிலை யக் கட்டடக் கால் கோள் விழாவும் இவ்வெள்ளி விழாவின் சிறப்புடை நிகழ்ச்சிகளாக அமைந்தன. அண்ணமலை அரசரின் உருவச் சிலையை மைசூர் மாநில மன்னர் அவர்களும், இராணி சீதை ஆச்சி மாணவர் இல்லத்தைச் சென்னை மாநில முதல் அமைச்சர் காமராச நாடார் அவர்களும் திறந்து வைத்தார்கள். சென்னைக் கவர்னர் ஸ்ரீபிரகாசா அவர்கள் டாக்டர் சர். சி. பி. இராமசுவாமி ஐயர் அவர்கள் நூல் நிலையத்திற்குக் கல் நாட்டினூர்கள். சிறப்புப் பட்டமளிப்பு விழாவில் 1. மைசூர் மாநில மன்னர் ஜெயசாமராஜ உடையார் பகதூர், 2. ராஜா சர். முத்தைய செட்டியார், 3. டாக்டர் சர் சி. பி. இராமசுவாமி ஐயர், 4. சர் எஸ். ஈ. அரங்கநாதன், 5. டாக்டர் சர் ஏ. இலக்குமண சாமி முதலியார், 6. பேராசிரியர் ச. சோமசுந்தர பாரதியார், 7. டாக்டர் எஸ். இராதாகிருட் டினன் ஆகிய எழுவருக்கும் கௌரவ டாக்டர் பட்டங்கள் வழங்கப்பெற்றன. வெள்ளி விழா

நினைவு மலர் ஒன்று மிக அழகிய முறையில் வெளி வந்தது.

இந்திய அரசாங்கம், இப் பல்கலைக் கழகம் இருபத்தைந்து ஆண்டுகளாகச் செய்த தொண்டு களைப் பாராட்டி, இங்கு ஒரு தமிழ்ப் பேராசிரியர் பதவி தோற்றுவிப்பதற்காக மூன்று லட்ச ரூபாய் இவ்வெள்ளிவிழாக் காலத்தில் வழங்கி இருப்பது பாராட்டுதற்குரியது.

# 10. ஐரோப்பா யாத்திரை

**இங்கிலாந்து செல்லல்**

1935-இல் பர்மாப் பிரிவுச் சட்டம் அச்சில் வந்தது. தனவணிகர், பர்மாவில் கோடிக் கணக்கில் தம் செல்வத்தை வைத்து வாணிகம் நடத்தி வந்தனர். அவர்கள் தம்மைப் பாதிக்கும் முறையில் பிரிவுச் சட்டம் அமைந்திருத்தலைக் கண்டு திகைத்தனர்; அவை எங்ஙனம் தனவணிகரைப் பாதிக்கின்றன என்பதை அதிகாரிகளுக்கு விளக்கி, வேண்டும் திருத்தங்களைச் செய்ய வல்ல ஒருவரை இங்கிலாந்துக்கு அனுப்புவதென முடிவு செய்தனர். அத்தக்கார் யாவர்? அவர் நம் செட்டி நாட்டு அரசரேயாவர். தனவணிகரும், பிறரும் வேண்டிக்கொண்டதற்கு அரசர் அன்புடன் இசைந்தார். பர்மாவில் உள்ள இந்தியப் பிரதிநிதிகளும் இந்தியாவில் உள்ள பிரதிநிதிகளும் சேர்ந்த ஒரு தூதுக் குழு இங்கிலாந்து செல்வதற்காக அமைக்கப்பட்டது. அக்குழுவின் தலைவராக நம் அரசர் இங்கிலாந்துக்குச் சென்றார். செல்லும் போது தம் அரசியாரையும் உடன் அழைத்துச் சென்றார். இதற்கு முன் தனவணிகப் பெண்கள் கடல் கடந்து சென்றதில்லை. முதன் முதலாக அரசர் தம் அரசியாரை உடன் அழைத்துச் சென்றது, சிறப்பாகக் குறிப்பிடத்தக்க ஒரு சீர்திருத்தமாகும். இச்செயல், பின்பு பல தனவணிகர் தம் மனைவிமாரை உடன் அழைத்துக்கெண்டு கடல் கடந்து செல்வதற்கு வழிகாட்டியாயிற்று.

## ராஜா அவர்களின் வெற்றி

"பர்மாவை இந்தியருக்கு அன்னிய நாடாக்கக் கூடாது. இந்தியர் பெருஞ் செல்வத்தைப் பர்மாவில் இறைத்துள்ளனர். பலர் அந்நாட்டையே தம் தாய் நாடாகக் கொண்டுள்ளனர். ஆதலின் இந்தியர் தடையின்றிப் பர்மாவுக்குச் சென்று தொழில்புரிய உரிமையளித்தல் வேண்டும். பர்மாவை வளப்படுத்தியது தனவணிகர் பெருஞ் செல்வமே யாகும். ஆதலால் பர்மாச் சட்டசபையில் தனவணிகர்களுக்கு ஓர் இடம் ஒதுக்கப்படல் வேண்டும். பிரிட்டிஷ் இந்தியர்கள் சென்று பர்மாவில் தங்கலாம் என்ற விதியில் 'சம்ஸ்தான இந்தியர்களும்' என்பது சேர்க்கப்படவேண்டும்," என்று ராஜா அவர்கள் பர்மாப் பிரிவினைச் சட்டத்தில் உள்ள குறைகளை இந்தியா அமைச்சருக்கும், சில பாராளுமன்ற உறுப்பினர்களுக்கும் மிகவும் நயமான முறையில் எடுத்துக்கூறி விளக்கினார்கள். அமைச்சர், அரசர் கூறியவற்றை ஏற்றனர். பாராளுமன்ற உறுப்பினர் சிலரும் அக்குறைகளைப் போக்குவதே முறை என்றனர். முடிவில் செட்டிநாட்டரசர் மேற்கொண்ட முயற்சி வெற்றி அளித்தது. இந்தியர் அனைவரும் அரசரை மிகவும் போற்றி வாழ்த்தினர்.

## ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் பேட்டி

செட்டிநாட்டரசர் தம் அரசியாருடன் ஐந்தாம் ஜார்ஜ் மன்னரைப் பேட்டி கண்டது குறிப்பிடத் தக்கது. இது கிடைத்தற்கரிய பேறன்றோ? மன்னர் பிரான், அரசரையும், அரசியாரையும் வரவேற்று உரையாடி மகிழ்வெய்தினர்.

**பிரான்சில் பேச்சு**

செட்டிநாட்டரசர் இங்கிலாந்தில் இருந்த பொழுது சைகோனில் தொழில் புரிந்த தனவணிகர் சார்பில் பிரெஞ்சு அதிகாரிகளிடம் பேச வேண்டுமென்று சைகோன் தனவணிகர் வேண்டுகோள் விடுத்திருந்தனர். உடனே செட்டிநாட்டரசர் இந்திய அமைச்சரின் பரிவுரைக் கடிதம் பெற்றுப் பாரிஸ் நகரை அடைந்தார் ; அங்கிருந்த ஆங்கிலத் தூதரைக் கண்டார் ; அவர் வாயிலாகப் பிரஞ்சுக் குடியரசு வெளிநாட்டு அமைச்சரைச் சந்தித்துச் சைகோனில் இருந்த தனவணிகர் குறைகளை விளக்கிக் கூறி அவற்றைப் போக்குமாறு செய்தார். அவர் பிரான்சிலும் வெற்றி பெற்றதைக் கண்ட தனவணிகர் அவருக்குப் பல்லாண்டு கூறினர்.

**பல நாடு காணல்**

அரசர் தம் அரசியாருடன் அமெரிக்கா சென்று வாஷிங்டன், சிகாகோ போன்ற பெரிய நகரங்களையும், போர்டு (Ford) தொழிற்சாலை போன்ற பெரிய தொழிற்சாலைகளையும் பார்த்தனர் ; உலகிற் பெரியதான நயாகரா நீர்வீழ்ச்சியைக் கண்டு மகிழ்ந்தனர் ; பின்னர் ஐரோப்பாவுக்குத் திரும்பி, ஜெர்மனி, ஆஸ்ட்ரியா, ஸ்விட்ஜர்லந்து, இத்தாலி முதலிய நாடுகளைப் பார்த்து இந்தியா மீண்டனர்.

### கோவிலூரில் பாராட்டு

இங்கிலாந்திலும் பிரான்சிலும் வெற்றி பெற்று மீண்ட தம் குலமணிக்கு நகரத்தார் கோவிலூரிற் பெரிய வரவேற்பளித்துப் பாராட்டினர். அப் போது பாராட்டும் பேறு பெற்றவர்களுள் யானும் ஒருவன். ராஜா அவர்கள் தாம் இங்கிலாந்திலும் பாரிசிலும் அதிகாரிகளைக் கண்டு பேசிய செய்தி களை அக்கூட்டத்தில் விளக்கமாகக் கூறினர்கள்.

# 11. பிற தொண்டுகள்

**வரிச் சுமை நீக்கம்**

இரண்டாம் உலகப் போரில் பர்மா, மலேயா முதலிய நாடுகள் ஜப்பானியர் வசமாயினமை யால், அங்கிருந்த தனவணிகர் தங்கள் சொத்துக் களையும், சுகங்களையும் இழந்து உயிர் பிழைத்தால் போதும் என்று தாய்நாடு மீண்டனர். அந்நிலை யில், பர்மாவில் அவர்களுக்கு இருந்த சொத்துக் களின்மீது இந்திய அரசாங்கத்தார் வரி விதித்து அதனை வசூலிக்க முற்பட்டனர். இது அறச் செயலன்று என்று 1942-ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்களில் ராஜா அவர்கள் இந்தியச் சட்டசபை யில் கல்மனத்தினரும் உளம் உருகும்படி பின் வரு மாறு எடுத்துரைத்தனர் :

"பர்மாவில் சொத்துக்கள் இருக்கின்றனவா—இல்லையா என்பதே சொந்தக்காரருக்கும், அரசாங் கத்தாருக்கும் தெரியாத காலத்தில், அவற்றின் மேல் வரி விதித்து, உயிர் பிழைத்துத் தாய்நாடு வந்து பிழைப்புக்கு வழியின்றி வாடி நிற்கும் தன வணிகரிடம் அவ்வரியை வசூலிக்க முயலுதல் அறச்செயலன்று. அரசாங்கத்தார் இதனை அன் புணர்ச்சியுடனும், இரக்க மனப்பான்மையுடனும் கவனிக்கவேண்டும். பர்மாவில் உள்ள எவ்வகைச் சொத்தும் ஜப்பானியர் கையில் சிக்கலாகாதென்று பிரிட்டிஷாரே அழிவு வேலையில் இறங்கினர். போதாக்குறைக்கு அந்நாட்டைக் கைப்பற்றிய ஜப்பானியரும் குண்டுகள் பொழிந்து நாட்டை நாசமாக்கினர். இந்நிலையில் தனவணிகருக்கு

அங்கு என்ன உடைமை இருக்கப்போகின்றது! இன்னது இப்பொழுது இருக்கிறது என்று உறுதியாய்த் தெரிந்துகொண்டு அதன்மீது வரி விதித்தலாவது நியாயம் என்று சொல்லலாம். அந்த முயற்சியும் செய்யாமல் போருக்கு முன் இருந்த சொத்துக்களைக் கணக்கிட்டு அவற்றுக்கு அவை இல்லாத காலத்தில் வரி விதித்து வசூலிக்க முயலுதல் செங்கோல் ஆட்சியினர் கடமையாகாது.''

ராஜா அவர்களின் உருக்கமான இப்பேச்சுக்குப் பின்பு அரசாங்கத்தார் வரி வசூலிக்கும் முயற்சியைக் கைவிட்டனர்.

**கோவில் திருப்பணிகள்**

ராஜா அவர்கள் தில்லைக் கோவிந்தராஜப் பெருமாள் கோவிலை நன்முறையில் புதுக்கி வைணவர் பாராட்டுக்கு உரியவரானார்; தில்லைக் கூத்தப்பிரான் கோவிலிலும் திருப்பணிகள் செய்து சைவர் பாராட்டினைப் பெற்றார்; கோவில் தீட்சிதர்களுக்கும், வைணவர்களுக்கும் நெடுங்காலமாக இருந்த மனமாற்றத்தைப் போக்கி ஒற்றுமைப்படுத்தினார்; தம் குல தெய்வமான இளையாற்றங்குடிச் சிவன் கோவிலைப் புதுப்பித்துக் கும்பாபிடேகம் நடத்தி வைத்தார்; கரூர்ப் பசுபதீசுவரர் கோவிலுக்கும், கொழும்பு இந்துக் கோவிலுக்கும் பொருள் வழங்கியுள்ளார். திருவண்ணாமலைச் சிவன் கோவில் போன்ற பல்வேறு கோவில்கள், அவரது பொருளுதவியைப் பெற்றுள்ளன.

### வெல்லிங்டன் கிளப்

பெண்கள் ஆண்களைப் போல எல்லாத் துறை களிலும் ஒத்த உரிமை பெறவேண்டும் என்பது ராஜா அவர்களின் எண்ணம். அவர்களுக்குத் தம்மால் இயன்ற உதவி செய்யவேண்டும் என்பது அவர் விருப்பம். அதனுல் அப்பெரியார் சென்னை யில் இரண்டு லட்ச ரூபாய் செலவில் **வெல்லிங்டன் கிளப்** என்ற நிலையத்தை நிறுவினுர். அக்கிளப் பில் பெண்மணிகள் உறுப்பினராகி ஒருவரோடு ஒருவர் கலந்து பழகுகின்றனர்; செய்தித் தாள் களைப் படிக்கின்றனர்; பலவகை விளையாட்டுக் களை ஆடுகின்றனர்; பல தொண்டுகளில் பங்கு கொள்கின்றனர்.

### சிதம்பரத்தில் டவுன்ஹாலும் பூங்காவும்

டாக்டர் ராஜா சர். அவர்கள், தில்லையம்பதி யில் நகரப் பெருமக்கள் கலந்து உறவாட, டவுன் ஹால் ஒன்றைக் கட்டினர்; அழகிய பூங்கா ஒன்றை அமைத்தனர். தில்லை மக்கள் நாள்தோறும் ராஜா அவர்களை எண்ணத் தக்க முறையில் இவையும், பல்கலைக் கழகமும், தில்லைத் திருப்பணிகளும் நன் முறையில் அமைந்துள்ளன.

### பிற அறச் செயல்கள்

ராஜா அவர்கள் மதுரையில் உள்ள மதுரைக் கல்லூரிக்குப் பொருள் உதவி செய்துள்ளனர்; மதுரை அமெரிக்கன் கல்லூரி மாணவர் விடுதிக் குப் பொருள் வழங்கியுள்ளனர்; திருச்சிராப்பள்ளி யிலுள்ள தேசிய உயர்நிலைப் பள்ளிக்கும் சென்னை

யிலுள்ள பின்னத்தூர்ச் சுப்பிரமணிய ஐயர் உயர் நிலைப் பள்ளிக்கும், டேராடன்னில் உள்ள இந்தியன் பப்ளிக் பள்ளிக்கும், டெல்லியில் உள்ள இர்வின் பள்ளிக்கும், பர்மாவிலும் கொழும்பிலும் உள்ள பல பள்ளிகளுக்கும் தளராது பொருள் உதவி யுள்ளனர். இவ்வாறு அவர்கள் அறவழியிற் செலவிட்ட பொருளின் மதிப்பு ஒன்றரைக் கோடி ரூபாய் என்னலாம். இப்பெருந் தொகை வழங்கிய வள்ளல் தென்னிந்தியாவில் வேறு எவரும் இல்லை.

## 61-ஆம் ஆண்டு விழா

ராஜா அவர்களுக்கு 28-9-1941-இல், 61-ஆம் ஆண்டு பிறந்தது. அந்நாள் மிகச் சிறப்புடன் கொண்டாடப்பட்டது. சிவபெருமான் திருமணத் திற்கு அனைவரும் இமயத்திற்குச் சென்றுற்போல, ராஜா அவர்களது 60-ஆம் திருமணத்திற்கு மாகாணப் பெருமக்கள் அனைவரும் செட்டிநாட்டுக் குச் சென்று அங்கு நடந்த விழாச் சிறப்பைக் கண்டு களித்தனர். அங்கே கூடியவர் தொகை முப் பதினுயிரம் எனலாம். இசை அரங்குகளும், நடன அரங்குகளும், கவியரங்குகளும் காட்சியளித்தன. அவரவர் தகுதிக் கேற்ற விடுதிகள் தரப்பட்டன. விருந்துகள் நடைபெற்றன. 'உபசாரங்களுக்குச் சிறிதளவும் குறை ஏற்படவில்லை,' என்று பெருஞ் செல்வர் முதல் ஏழை மக்கள் ஈருக அனைவரும் கூறி அகங் குளிர்ந்தனர். ராஜா அவர்கள் அந்த நன்னுளில் பல தான தருமங்கள் செய்தார். அன்று அவர் பலவகை அறங்களுக்கும் வழங்கிய தொகை, மூன்றரை லட்ச ரூபாயாகும். அதில்

அண்ணுமலைப் பல்கலைக் கழகத்துக்கும் ஒரு பங்கு (36,000 ரூபாய்) கிடைத்தது.

ராஜா அவர்களின் அறுபத்தொன்ருவது ஆண்டுப் பிறந்த நாள் விழாவை, அண்ணுமலைப் பல்கலைக் கழகமும் மிகச் சிறப்பாகக் கொண்டாடியது. அக் கூட்டத்திற்குத் தலைமை தாங்கிய ரைட் ஆனரபிள் எம். ஆர். ஜெயகர், ராஜா அவர்களின் உயர்ந்த பண்புகளைப் பாராட்டிப் பேசினுர். அப்போது நினைவு மலர் ஒன்றை 1200 பக்க அளவில், பதினுயிர ரூபாய்ச் செலவில் பல்கலைக் கழகம் அச்சிட்டு ராஜா அவர்களுக்கு வழங்கியது; அம்மலரில் மகாத்மா காந்தி அடிகள் முதலிய பல சான்றேர்களின் வாழ்த்துரைகளும், பல அறிஞர்களின் ஆராய்ச்சிக் கட்டுரைகளும், வாழ்த்துப் பாடல்களும் பல மொழிகளில் திகழ்கின்றன.

## அண்ணுமலைப் பல்கலைக்கழக டாக்டர் பட்டம்

ராஜா சர். அண்ணுமலைச் செட்டியாரின் தொண்டுகளைப் பாராட்டி, அவருக்கு டி. லிட். (D. Litt.) **என்னும் டாக்டர் பட்டம்** கொடுக்க வேண்டும் என்று அண்ணுமலைப் பல்கலைக் கழகம் முடிவு செய்தது. 9-12-42-இல் நடைபெற்ற அண்ணுமலைப் பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழாவில், சென்னை கவர்னர் சர். ஆர்தர் ஹோப், திருவனந்தபுரம் மகாராஜா, அவரது தாயாராகிய சேது பார்வதிபாய், டாக்டர் ராஜா சர். அண்ணுமலைச் செட்டியார் ஆகிய நால்வருக்கும் டி. லிட். என்னும் சிறப்புப் பட்டம் அளிக்கப்பட்டது. அப்பட்டமளிப்பு விழாவிற் பேசிய துணைவேந்தர் திரு. எம்.

இரத்தினசாமி அவர்கள், செட்டிநாட்டரசருடைய அறச் செயல்கள் அனைத்தையும் குறிப்பிட்டுப் பாராட்டிப் பேசினர். அவர் கடைசியில், "தந்தை யாரிடத்தில், குழந்தை பக்தியுடனும் நன்றியுட னும் தன் அன்பைச் செலுத்திக்கொள்வது போல, இப் பல்கலைக் கழகம் இப்பட்டத்தை ராஜா அவர் களுக்கு அளிக்கிறது," என்று கூறியது மிகப் பொருத்தமாக இருந்தது.

# 12. தாய்மொழித் தொண்டு

## தமிழ்ப் பற்று

ராஜா அவர்கள் தமிழர்; தம் தாய்மொழியாகிய தமிழினிடம் நீங்காப் பற்றுடையவர்; தமிழ்ப் பல்கலைக் கழகம் நிறுவியவர்; "தமிழ்மொழி பழையது; வளம் மிக்கது; ஆதலின், இதனை மேலும் வளர்ப்பது நமது கடமை. தமிழைத் தமிழர்க்குக் கற்பித்தலும், தமிழ் வல்லாரை ஆதரித்தலும், தமிழ் நூல்களை வெளியிடலுமே தமிழ் வளர்ச்சிக்கு ஏற்றவை," என்று எண்ணித் தம் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் புலவர் வகுப்புக்களைத் தொடங்கினர்; நாட்டிற் பெரும் புகழ் பெற்றிருந்த புலவர் பெருமக்களை ஆசிரியர்களாக அமர்த்தினர்; தமிழ் ஆராய்ச்சிக் கூடம் அமைத்துப் பெயர் பெற்ற அறிஞர்களை ஆராய்ச்சியாளர்களாக நியமித்தனர்.

## புலவர் வகுப்பும், பி. ஏ. ஆனர்ஸ் வகுப்பும்

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில், புலவர் வகுப்புத் தொடங்குவதற்கு முன், தமிழ் வித்துவான் வகுப்புக்கள் நடைபெற்ற கல்லூரிகள் நாட்டில் இல்லை. மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் பண்டித வகுப்புக்கள் நடந்தன. அவற்றில் மிகச் சிலரே கல்வி கற்றனர். பல்கலைக் கழகத்தில் புலவர் கல்லூரி தொடங்கப்பெற்ற பின்பே நூற்றுக் கணக்கான தமிழ் இளைஞர்களும், மகளிர்களும், அங்குப் படித்துப் புலவர் பட்டம் பெற வாய்ப்பு உண்டாயிற்று.

இன்று நாட்டில் பல இடங்களில் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திற் பயின்று பட்டம் பெற்ற புலவர்களைக் காண்கின்றோம். சென்னைப் பல்கலைக் கழகத்தில் தேர்வு நடத்தப்படுகிறதேயன்றிப் புலவர் கல்லூரிகள் அக்காலத்தில் உண்டாகவில்லை. பின்னரே திருவையாறு, திருப்பதி, மயிலம், கரந்தை முதலிய சில இடங்களில் தமிழ்ப் புலவர் கல்லூரிகள் தோன்றின. தமிழில் பி. ஏ. ஆனர்ஸ் வகுப்பை முதலில் தொடங்கித் தமிழ் எம். ஏ. பட்டதாரிகளை வெளிப்படுத்திய பெருமையும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திற்கே உரியது.

**புலவர் பயிற்சிக் கல்லூரி**

தமிழில் புலவர்களுக்கு ஆசிரியப் பயிற்சி ஏற்படுத்திய முதலிடமும் அண்ணாமலைப் பல்கலைக் கழகமே யாகும். வேறு எங்கும் அப்பயிற்சிப் பள்ளி ஏற்படவில்லை. இப்பொழுது சென்னை, சைதாப் பேட்டையில் அரசாங்கத்தார் ஒரு வகுப்பை நடத்தி வருகின்றனர். வடமொழி ஆசிரியப் பயிற்சி வகுப்பும் இப்பல்கலைக் கழகத்தில்தான் முதன் முதலாகத் தொடங்கப் பெற்றதென்பது, இங்கே குறிப்பிடத் தக்கது.

**பாரி காதைக்குப் பரிசு**

மகா வித்துவான், ரா. இராகவ ஐயங்கார் முல்லைக்குத் தேரீந்த சங்க கால வள்ளலாகிய பாரி வரலாற்றைப் **பாரி காதை** என்னும் நூலாகப் பாடினார். 14-2-1934-இல் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில், அந்நூல் அரங்கேற்றம் செய்யப்

பட்டது. ராஜா அவர்கள் குமாரராஜா அவர்களை அங்கு அனுப்பிப் பாரி காதை பாடிய பாவலர்க்குப் பரிசில் வழங்கிச் சிறப்பித்தார்.

**புலவர் பெருமக்களுக்குப் பொன்னுடை போர்த்தல்**

தனவணிகர், கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்களைப் பாராட்டச் சிறப்புக் கூட்டம் ஒன்றை ஆத்தங்குடி முத்துப்பட்டினம் என்ற ஊரில் கூட்டினர்; அக் கூட்டத்தில், ராஜா அவர்களைக் கொண்டு கவிமணி அவர்களுக்குப் பொன்னுடை போர்த்தனர். அப்போது கவிமணி,

> " நாடு சேர்ந்த நல்லவையில் நடுநா யகமாய் எழுந்தருளி
> ஈடில் லாத பொன்னுடை எவருங் காண எனக்களித்துப்
> பீடு மிகவே பெறவைத்த பெரியன் **அண்ணு மலைமன்னன்**
> நீடு வாழ ஈசனையான் நித்தம் வேண்டி நிற்பேனே"

என்று பாடி ராஜா அவர்களை வாழ்த்தினர்.

காரைக்குடியில் கதிரேசன் கழகத்தார், மகா மகோபாத்தியாய பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் அவர்களைப் பாராட்ட ஒரு சிறப்புக் கூட்டம் கூட்டினர். அக்கூட்டத்திலும் நம் ராஜா அவர்கள் பண்டிதமணி அவர்களுக்குப் பொன்னுடை போர்த்தார்கள். அப்போது பண்டிதமணி,

> " பொன்னுடை ஒன்றோ புகழாடை யும்புனையும்
> எந்நாளும் கல்வி இனிதோங்கப்—பொன்னீயும்
> **அண்ணு மலைப்பே ரரசன்** அருந்திறல்என்
> கண்ணூர் மணியனையான் கை"

என்று பாடி நம் வள்ளலைப் பாராட்டினர்.

## தமிழ் இசை இயக்கம்

சங்ககாலத் தமிழிசை—பிற்காலத்தில் நாயன்மாரும், ஆழ்வார்களும் வளர்த்த தமிழிசை - பிற்காலச் சோழர்கள் வளர்த்த தமிழிசை - பின்னர்த் தமிழர்களால் நன்கு பேணப்படாமல் நலிவுற்றது. தமிழ் நாட்டில் பெரும்பாலும் வேற்றுமொழிப் பாடல்களே பாடப்பட்டன ; பயிலப்பட்டன. இசை அரங்குகளில் தமிழ்ப் பாடல்களைக் கேட்பதே அரிது. ராஜா சர் இந்த இழிநிலையைக் கண்டார் ; "தமிழில் பாடினால் அல்லவா தமிழ் மக்கள் பொருள் உணர்ந்து பாக்களைச் சுவைப்பர்?" என்று எண்ணினர் ; 1941-ஆம் ஆண்டு அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழாவில், தமிழ் இசை நூல்கள் வெளியிடப் பதினாயிரம் ரூபாய் நன்கொடை அளித்தார் ; அதன் பின்னரும் பல பதினாயிரங்கள் உதவியிருக்கிறார். அவருடைய இடையறாத முயற்சியாலும், ஆதரவாலும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் 21 தமிழிசை நூல்கள் வெளிவந்துள்ளன.

14-8-41-இல் அண்ணாமலை நகரில் முதல் தமிழ் இசை மாநாடு கூடியது ; பலர் இத்தமிழிசை இயக்கத்தை எதிர்த்தனர். பின்னர் ராஜா அவர்கள், "இத்தமிழிசை இயக்கம் எவ்வித வேறுபாட்டையும் உட்கொண்டதன்று ; தமிழர், தம் தாய் மொழியில் இசையைக் கேட்டு, இசை இன்பமும், பொருள் உணர்ச்சியும் ஒருங்கு பெற்றுப் பெருமகிழ்வு எய்தவேண்டும் என்பதே இவ்வியக்கத்தின் உண்மை நோக்கமாகும்," என்று தம் கருத்தைப் பல கூட்டங்களில் விளக்கமாகக் கூறினார்கள். எங்

கும் ஆதரவு பெருகியது. தமிழர், தாம் மறந்து இருந்த தமிழ் இசை வளம்பெறுங் காலம் வந்ததை உணர்ந்தனர். எங்கும் தமிழ் இசை மாநாடுகள் நடந்தன. ஆங்காங்குத் தமிழ் இசைக் கழகங் களும், கல்லூரிகளும் தோன்றின. தமிழ் இசை மலர்கள் பல, மலர்ந்தன. புகழ்பெற்ற இசை வாணர்கள் இசை அரங்குகளில் பெரும்பாலும் தமிழ்ப் பாடல்களையே பாடினர். எதிர்ப்புக்கள் அடங்கின.

## சென்னைத் தமிழ் இசைச் சங்கம்

ராஜா அவர்களின் முயற்சியாலும், டாக்டர் சர். ஆர். கே. சண்முகம் செட்டியார் அவர்கள் முதலிய தமிழ்ப் பெருமக்களின் முயற்சியாலும் ஆதரவாலும் பெரும் மூலதனத்துடன் சென்னை யில் ஒரு தமிழிசைச் சங்கம் நிறுவப்பெற்றது. அது தமிழிசையை நன்கு வளர்த்து வருகின்றது ; அதன் சார்பில் ஆண்டு தோறும் தமிழ் இசை விழா மிகச் சிறப்பாக நடைபெறுவதை அறியாத தமிழர் இரார். அச்சங்கம் 1943 முதல் இசைக் கல்லூரி ஒன்றையும் நடத்துகின்றது ; அக்கல்லூரி யில் நான்கு ஆண்டுகள் பயின்று தேர்வில் வெற்றி பெற்றவர்களுக்கு " இசைச் செல்வம் " என்னும் பட்டமும், ஐந்து ஆண்டுகள் பயின்று தேர்வில் வெற்றி பெற்றவர்களுக்கு " இசை மணி " என்னும் பட்டமும் வழங்கப்படுகின்றன. ராஜா அவர்கள் மேற்கொண்ட இந்த நன்முயற்சியால் தமிழ் இசை, நாட்டில் நன்கு பரவி வருகின்றது. தமிழ் இசைச் சங்கத்தார் இசைத்தமிழ் ஆராய்ச்சி செய்தல் சிறந்த பணியெனக் கருதி, 1949-ஆம் ஆண்டு

டிசம்பர் மாதத்தில் தேவாரப் பண் ஆராய்ச்சிக் கூட்டத்தைச் சிறந்த முறையில் நடத்தியதையும், அக்கூட்டத்தில் பல பண்களைப் பற்றி ஆராய்ச்சி முடிபுகள் செய்யப் பெற்றதையும், தமிழ் மக்கள் நன்கு அறிவர். இப்பண் ஆராய்ச்சி தொடர்ந்து ஆண்டுதோறும் நடைபெற்று வருகின்றது. ராஜா சர். அண்ணுமலைச் செட்டியாருக்குப் பின் அவருடைய குமாரர்களாகிய டாக்டர் ராஜா சர். முத்தைய செட்டியார் அவர்களும், திரு. சிதம்பரஞ் செட்டியார் அவர்களும் மேற்கொண்ட பெரு முயற்சியின் பயனுகத் தமிழ் இசைச் சங்கத்துக்குச் சொந்தப் புதுப்பெருங் கட்டடம் சென்னையில் தோன்றியுள்ளது. அது ராஜா சர். அண்ணுமலைச் செட்டியார் அவர்களின் பெயரால் **அண்ணுமலை மன்றம்** என விளங்குகின்றது. அம்மன்றம் அண்ணுமலை அரசரின் புகழ் வடிவுபோல் காட்சி அளிப்பதைக் காணலாம். ராஜா சர். அண்ணுமலைச் செட்டியார் அவர்களும், அவர்களின் குமாரர்களும் தமிழ் இசை வளர்ச்சிக்குப் பல வகையிலும் வழங்கிய தொகை மூன்று லட்ச ரூபாயாகும்.

## இறுதிக் காலத்தும் இசைத் தமிழ் நினைவு

ராஜா அவர்கள், இறையடி நீழல் எய்துவதற்கு முன் எழுதிய கடைசிக் கடிதம், தமிழ் இசை வளர்ச்சிக்கு நன்கொடை வழங்கியதைப் பற்றியதே என்பது சிறப்பாகக் குறிப்பிடத் தக்கது; அக்கடிதம் அப்போது கல்கத்தாவில் கவர்னராக இருந்த டாக்டர் திரு. இராசகோபாலாச்சாரியார் அவர்களுக்கு எழுதப்பட்டது. கோபால கிருஷ்ண பாரதியார் நாள் கொண்டாட்டத்தில், ஆண்டு

தோறும் பாட்டுப் போட்டியில் வெற்றி பெறுப வர்களுக்குத் திரு. இராசகோபாலாச்சாரியார் பெயரால் தம்பூர் பரிசு வழங்கும் செய்தியும், அதற்கு மூலதனமாகச் சென்னைத் தமிழ் இசைச் சங்கத்துக்கு நம் வள்ளல், 3001 ரூபாய் நன் கொடை அளிக்கும் செய்தியும், பிறவும் அக் கடிதத்தில் குறிக்கப்பெற்றிருந்தன ; அதில் அவர் கையெழுத்திடுவதற்கு முன் இறைவன் திருவடியை அடைந்துவிட்டார் ; பின்பு, தம் தந்தையார் விருப் பத்தை ராஜா சர். முத்தைய செட்டியார் நிறை வேற்றினர்.

இவ்வாறு பல வகையிலும், நலிந்த தமிழ் இசைக்கு நல்லுயிர் கொடுத்த வள்ளலை வாழ்த்தி, நம் தமிழிசையை வளர்ப்பது தமிழராகிய உங்கள் கடமையாகும்.

# 13. ராஜா சர். அண்ணுமலைச் செட்டியார் பிரிவு

இவ்வாறு பல செயற்கருஞ் செயல்கள் செய்த தீரரும், மக்கள் பெறத்தக்க எல்லாப் பேறுகளும் பெற்று நல்வாழ்வு வாழ்ந்தவரும் ஆகிய நம் அண்ணுமலைச் செட்டியார், தமது அறுபத்தேழாம் ஆண்டில் (15-6-48-இல்) இறைவன் திருவடியை அடைந்தார். உலகப் பெருமக்களுள் ஒருவராகிய அவர் பிரிவு, பொதுவாக இந்தியாவிற்கும், சிறப் பாகத் தமிழ் நாட்டிற்கும் பேரிழப்பாகியதை உணர்ந்து மக்கள் மிகவும் வருந்தினர். எங்கும் இரங்கல் கூட்டங்கள் நடந்தன; அவருடைய உயர்ந்த பண்புகளை அறிவு ஆற்றல்களில் தலை சிறந்த பல பெரியோர் எடுத்துக் கூறி, அவர் பிரிவுக்கு வருத்தம் தெரிவித்தனர். அக்கூட்டங் களுள் சென்னையில் ஷெரிப் அவர்களால் கூட்டப் பட்டுச் சென்னைக் கவர்னர் நை அவர்கள் தலைமை யில் நடந்த கூட்டம் மிகப் பெரியது.

### கூட்டங்களில் செய்யப்பட்ட முடிவுகள்

நம் வள்ளலின் வழிகளைப் பின்பற்றி மக்கள் உயர்வதற்கு உதவியாக அவருடைய உருவச்சிலை களை எங்கும் நாட்டுதல் வேண்டும்; அவர் பெய ரால் பெரிய நகரங்களில் மண்டபங்கள் கட்டுதல் வேண்டும்; அவர் பெயரால் பல உதவிச் சம்பளங் களும், பரிசுகளும் அமைத்துப் பல மாணவர் கல்வி நலம் பெறுதற்கு வகை செய்தல் வேண்டும்;

அவர் பெயரால் தமிழ் இசைச் சங்கங்கள் நிறுவி, அவர் வளர்த்த தமிழ் இசையை வளர்த்தல் வேண்டும்; அவர் வரலாற்றைச் சுருக்கமாகவும், விரிவாகவும் எழுதி, எல்லா வகுப்பு மாணவரும் பயின்று பயன்பெறச் செய்தல் வேண்டும் எனப் பலவகை முடிவுகளை அக்கூட்டங்களிற் செய்தனர். நன்கொடைப் பொருளும் லட்சக் கணக்காகத் திரண்டது. இந்தியா அளவில் நில்லாமல் இலங்கையிலும் அமைச்சர்கள் முதலிய பல பெருமக்கள் கூடி, அங்கே நம் அரசர் அவர்களின் நினைவாகப் பெரியதோர் அறிகுறி நிறுவுதல் வேண்டும் என முடிவு செய்தனர்.

கோயமுத்தூர்ப் பெருமக்கள், அங்கே நம் வள்ளல் பெயரால், **அண்ணமலை இசைக் கழகம்** என ஒரு கழகம் நிறுவி இருப்பது பாராட்டற்குரியது. இவ்வாறே எல்லா முடிவுகளையும் மக்கள் விரைவில் நிறைவேற்றுவார்கள் என்று நம்புவோமாக.

அண்ணமலை அரசரை நாம் என்றும் மறக்க முடியாது. அவருடைய பூதவுடல் அழியினும், புகழுடல் அழியாது இவ்வுலகம் உள்ளளவும் நின்று நிலவும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

### வாழ்க்கைக் குறிக்கோள்

அவர் தம் வாழ்க்கையின் குறிக்கோளை 25-3-1944-இல் ஒரு கடிதத்தில் எழுதியுள்ளார். பொன் எழுத்துக்களால் பொறிக்கத் தக்க அக்கடிதத்தைப் பாருங்கள்; அவர் குறிக்கோள் எவ்வளவு உயர்ந்தது என்பதை உன்னிப்பாருங்கள்; இக்குறிக்கோளைத் தம் வாழ்நாள் முழுவதும்

கடைப்பிடித்த அப்பெருந்தகையாளரைப் பற்றித் தக்கார் பலர் வெளியிட்டுள்ள கருத்துக்களில் சில பகுதிகளை இங்கே காண்க.

**டாக்டர் சர். ஆர். கே. சண்முகம் செட்டியார் அவர்கள்**

"நீதிநெறி விளக்கத்தில் உள்ள பல செய்யுள்களுக்கு ராஜா அவர்களை மேற்கோளாக எடுத்துச் சொல்லலாம்; அவருடைய பண்பாடு மிகவும் பாராட்டத் தக்கது. செல்வர் முதல் எளியோர் வரை எல்லோரையும் வித்தியாசம் பாராட்டாமல் ஒரு தரமாய் அன்பு ததும்ப மரியாதை செய்வது அவருடைய தனிப்பட்ட குணங்களில் ஒன்றாகும். தமிழ் நாட்டுக்கு அவர் செய்த தொண்டைத் தமிழ் மக்கள் எந்நாளும் மறக்க முடியாது. தமிழ்க் கலைகளைப் போற்றி ஆதரித்த வள்ளல்களுக்கிடையே அவர் முதன்மை ஸ்தானத்தைப் பெற்றுவிட்டார்."

**டாக்டர். சி. இராசகோபாலாச்சாரியார் அவர்கள்**

"ராஜா அவர்கள் பலதிறப்பட்ட அபிப்பிராயம் உள்ளவர்களிடையே எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும் என்ற நுட்பத்தை நன்கறிந்தவர். அவர், தம்முடைய கருத்தைத் தைரியமாக வெளியிடுவார்; ஆனால் மிகுந்த மரியாதையும் அடக்கமும் காட்டத் தவறமாட்டார்; மிகுந்த கண்ணியத்துடன் நடந்துகொள்ளுவார்."

**திரு. பி. எஸ். குமாரசாமி ராஜா அவர்கள்**

"ராஜா சர். அவர்கள் பெருமை மிக்க மனித ராகத் தமது வள்ளன்மையால் திகழ்ந்தார். ஈட்ட லும், காத்தலும், வகுத்தலும் அவரது உயரிய நோக்கங்களாயிருந்தன. அவரை எந்நாளும் நாம் மறக்க முடியாது. கல்வித் துறையில், நமது நாட்டு வளர்ச்சி பற்றிய சரிதையில் அவரது திருப் பெயர் பொன்னுல் எழுதப்படும் பெருமை யுடை யது. எல்லோரும் பின்பற்றத்தக்க புகழுடனும், சிறப்புடனும் அவரது பெயர் என்றும் நிலைத் திருக்கும்."

# 14. ராஜா அவர்கள் குடும்பம்

**மக்கள் எழுவர்**

ராஜா அவர்களுக்கு மக்கள் எழுவர் உள்ளனர். அவருள் பெண்கள் நால்வர்; ஆடவர் மூவர். பெண் மக்கள் நால்வரையும் தக்க செல்வக் குடும்பங்களில் மணஞ் செய்து கொடுத்திருக்கிருர்.

**டாக்டர் ராஜா சர் முத்தைய செட்டியார்**

ராஜா அவர்களின் மூத்த புதல்வரான இவர், தம் தந்தையாரைப் போலவே தொழில் துறையிலும், பொது வாழ்விலும் மிக விரைவில் உயர்ந்து விட்டார்; தந்தையார் இருந்தபொழுதே நாடறிந்த அறிஞராய்த் திகழ்ந்தார். இவர், மாசுமறுவற்ற உள்ளம் உடையவர்; தந்தையாரைப் போலவே பொதுநலப் பணிகளில் ஆர்வம் மிகுந்தவர்; தாய் தந்தையரிடம் பெரு மதிப்புக் கொண்டவர்; பி. ஏ. பட்டம் பெற்ற இவர், ஆங்கிலத்திலும், தமிழிலும் சொற்பெருக் காற்றுவதில் வல்லவர்; அனைவரிடமும் மிக்க அன்பும், மரியாதையும் காட்டிப் பேசுபவர்; காட்சிக்கு எளியவர்; தம் கடமைகளைச் சோர்வின்றிச் செய்பவர்; எச்செயலையும் நன்கு எண்ணித் துணிந்து, எண்ணியவாறே நிறைவேற்றும் அறிவாற்றல் படைத்தவர்.

**சென்னை நகரின் முதல் மேயர்**

இவர் 1929-ஆம் ஆண்டு முதல் ஆறு ஆண்டுகள் சென்னை நகராண்மைக் கழக உறுப்பினராய்



டாக்டர் ராஜா சர் முத்தைய செட்டியார் அவர்கள்
Kt. B.A., M.L.A., D. Litt.

அண்ணாமலைப் பல்கலைக் கழக இணை வேந்தர்.

இருந்தார்; உறுப்பினராகி மூன்று ஆண்டுகளுக்குள் அதன் மேயர் ஆனுர். அப்பொழுது இவர் வயது 27. இச் சிறுவயதில் எவருமே-எங்குமே மேயரானதில்லை என்பது இங்கே சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது. இவர், தமது பதவிக் காலத்தில் சென்னை நகரில் பல சீர்திருத்தங்கள் செய்தார்; அதனுல் இரண்டாம் முறையும் மேயராகத் தேர்ந்தெடுக்கப் பெற்ருர். இவர் மேயராகப் பதவி ஏற்றபோதுதான் நகரசபைத் தலைவருக்கு மேயர் என்ற பெயரே ஏற்பட்டது. இவர், முதல் மேயராக விளங்கியமையால், இவருடைய முழு உருவப்படம் நகராண்மைக் கழக மண்டபத்தில் திறந்து வைக்கப் பெற்றுள்ளது. இவர், 1935-இல் கல்கத்தா சென்றபொழுது அந்நகர சபையார், இவருக்கு வரவேற்பிதழ் படித்தளித்து மகிழ்ந்தனர்.

**மாகாண அமைச்சர்**

இப் பெருந்தகையார், 1930-ஆம் ஆண்டுமுதல் இன்றுவரை சென்னை மாகாணச் சட்டசபையில் உறுப்பினராய் இருக்கிருர். தொடர்ச்சியாக இருபத்தைந்து ஆண்டுகள் இப்பதவியைப் பெற்ற தமிழர் வேறு ஒருவரும் இல்லை. பொதுமக்கள் நல்வாழ்விற்கு இன்றியமையாத தேவைகள் அவர்களுக்குக் கிடைக்கவேண்டு மென்பதுபற்றிய செய்திகளைச் சட்டசபையில் அழுத்தம் திருத்தமாக இவர் எடுத்துரைப்பவர்; எச்செயலையும் ஆழ்ந்து ஆராய்ந்து, தக்கதெனத் தாம் முடிவுக்கு வந்தால், அதனை அஞ்சாது சட்ட சபையில் வற்புறுத்துபவர். இவர், 1936-37-இல் இம் மாகாணக் கல்வி-சுகாதார அமைச்சரானுர்; கல்வி அமைச்சர் என்ற முறை

யில் சென்னைப் பல்கலைக் கழக இணை வேந்தர் (Pro-chancellor) ஆனார். ஒரே காலத்தில் தந்தையார் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திற்கு இணை வேந்தராகவும், மைந்தர் சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு இணை வேந்தராகவும் திகழ்ந்தமை வரலாற்றிற் குறிப்பிடத்தக்க அரிய நிகழ்ச்சியன்றோ? பேறு பெற்ற இக் குடும்பத் தினருக்கன்றி இத்தகைய உயர்நிலை, வேறு எவருக்கு வாய்க்கும்? இவர் சென்னைப் பல்கலைக் கழகச் செனேட், சிண்டிகேட் சபைகளில் பல்லாண் டுகளாகத் தொடர்பு கொண்டவர். புதிய அரசியல் திட்டப்படி அமைக்கப்பட்ட அமைச்சர் அவையிற் சிறிது காலம் இவர் அமைச்சராய் இருந்தார்; அரசியல் நிர்ணய சபை உறுப்பினராகவும் இவர் தேர்ந்தெடுக்கப் பெற்றார்.

## பலவகைத் தொண்டு

பச்சையப்பர் அறநிலையப் பாதுகாப்பாளர் ஒன்பதின்மருள் இவர் ஒருவராவர். இவர் அக்குழு வில் 1928 முதல் இன்றளவும் இருந்துவருகிறார்; ஒருமுறை அதன் தலைவராகவும் விளங்கினார். அக்காலத்திற்றான் பச்சையப்பர் கல்லூரி நூற் றாண்டு விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது.

இவர் தமது 28-ஆம் வயதிலேயே இம்பீரியல் பாங்கின் டைரக்டர் பதவியை ஏற்று, நான்காண்டு கள் (1932-36) திறமையுடன் செயலாற்றினார்; இந்தியன் பாங்கிலும் சிறிதுகாலம் தொண்டுசெய் தார். 1929-இல் தந்தையார் அகில இந்திய பாங்கு விசாரணைக் குழுவில் ஒருவராய் இருந்தபொழுது

சென்னை மாகாணப் பாங்கு விசாரணைக் குழுவில் இவர் உறுப்பினராயிருந்தமை குறிப்பிடத்தக்கது.

இவர், தென்னிந்திய வணிக சங்கத்தின் தலைவராக ஓராண்டு இருந்து, அத்துறையில் உழைத்தார்; அகில இந்திய வணிக சங்கத்தின் தலைவராக ஓராண்டு பதவி ஏற்ருர்; டெல்லியில் அச்சங்கத்தின் ஆண்டு இறுதிக் கூட்டத்தில் அரிய சொற்பொழிவு ஆற்றினுர். பொருளாதாரம், அரசியல் என்னும் இரண்டையும் பற்றிக் குறிப் பிடும் அச்சொற்பொழிவு, செய்தித் தாள்களில் வெளிவந்து உலக அறிஞர் பாராட்டுக்கு உரிய தாயிற்று. இவர் தொடர்பு கொண்டு தொண் டாற்றும் பொதுநல நிலையங்கள் எத்துணையோ பல.

தமிழர் நல்வாழ்விற்கும், தமிழ் இசை வளர்ச் சிக்கும் இடையருது இவர் செய்துவரும் பலவகைத் தொண்டுகள் தமிழ் வரலாற்றில் சிறப்பிடம் பெறத் தக்கன.

### சர் பட்டம்

இவருடைய அறிவாற்றல்களையும், தொண்டு களையும் பாராட்டிய அரசாங்கத்தார், இவருக்கு 1941-இல் சர் பட்டத்தை அளித்துச் சிறப்பித்த னர். தந்தையார் சர்; மைந்தரும் சர்; இப்பேறு பெற்ற குடும்பங்கள் உலகில் சிலவே அல்லவா?

## அண்ணுமலைப் பல்கலைக் கழக இணைவேந்தர்

இவர், தம் தந்தையாருக்குப் பின் அண்ணு மலைப் பல்கலைக் கழக இணைவேந்தர் ஆனுர். இப் பல்கலைக் கழகத்தை உருவாக்குவதில் இவர் தம் தந்தையாருக்கு மிகவும் உதவியாக இருந்தவர். தம் தந்தையாரைப் போலவே இப்பல்கலைக் கழக வளர்ச்சியில் இவர் கண்ணுங் கருத்துமாக இருக் கிருர். இவர் காலத்தில், பல கல்விப் பகுதிகள், பல்கலைக் கழகத்தில் தோன்றியிருக்கின்றன; அழகிய பெரிய கட்டடங்கள் பல, உருவெடுத் துள்ளன; தமிழ் மொழி வளர்ச்சியில் சிறப்பாக இவர் ஆர்வங் கொண்டிருப்பதற்கு அறிகுறியாகத் தமிழ்ப் பகுதி மூன்று பிரிவாக விரிந்து வளர்ந்து வருகின்றது; பல்கலைக்கழக ஆசிரியர் தொகையும், மாணவர் தொகையும் மிகுந்துள்ளன. ஆராய்ச்சி நூல்கள் பல, வெளிவந்திருக்கின்றன. இப்பல் கலைக்கழக வெள்ளி விழா, அனைவரும் பாராட்டும் முறையில் தனிப்பெருஞ் சிறப்பாக நடைபெற்ற தற்கு முதற்காரணம், இவருடைய இடைவிடாப் பெரு முயற்சியே என்பது, எல்லோரும் அறிந்த செய்தி ஆகும். சுருக்கமாகச் சொன்னுல், இவர், அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தைக் கண்ணினைக் காக்கின்ற இமைபோல் காத்துவருகின்ருர் என்று கூறலாம். பல்கலைக் கழகம், இவருடைய அரிய தொண்டுகளைப் பாராட்டி, வெள்ளி விழாக் காலத் தில், இவருக்கு டாக்டர் பட்டம் வழங்கித் தன் பெருமதிப்பைக் காட்டியது. இவருடைய ஆதர வால் பல்கலைக் கழகம் மேலும் மேலும் வளர்ந்து ஓங்கும் என்பதில் ஐயமில்லை.

### மனைவியும், மக்களும்

இவருடைய மனைவியார் செட்டிநாட்டரசி மெய்யம்மை ஆச்சி அவர்கள், கருணை நிறைந் தவர் ; உயர் குணங்களுக்கு உறைவிடம் ஆனவர் ; தம் அரச குடும்பத்துக்கு இயல்பாக அமைந்த விருந்தோம்பலில், தம் கணவருக்கு மிகவும் உதவி யாக இருக்கிறார் ; பொதுநலத் தொண்டுகளில் இவர் மிகுந்த ஆர்வம் உடையவர்.

டாக்டர் ராஜா. சர் முத்தைய செட்டியாருக்கு முத்தைய செட்டியார், இராமசாமிச் செட்டியார் என்னும் இரண்டு புதல்வர் உள்ளனர். இருவரும் பி. ஏ. பட்டம் பெற்றவர் ; இருவரும் பொதுநலப் பணிகளில் ஈடுபடத் தொடங்கியுள்ளனர். இவர் களுள் முத்தைய செட்டியார், இப்போது குமார ராஜாவாக விளங்குகிறார். சென்னை நகராண்மைக் கழக உறுப்பினராக அண்மையில் இவர் தேர்ந் தெடுக்கப்பெற்றுள்ளார் ; இந்தியன் பாங்கின் டைரக்டராகவும் இவர் இருந்துவருகிறார். இவர் மனைவியார் குமார ராணி மீனாட்சி ஆச்சி அவர் களும் பி. ஏ. பட்டம் பெற்றவர். குமார ராணி, குமார ராஜா ஆகிய இருவரும் நற்குணம் நிறை யப் பெற்றவர்கள்.

### திரு. இராமநாதன் செட்டியார்

அண்ணாமலை அரசரின் இரண்டாம் புதல்வ ராகிய இவர் இளமையிலேயே தம் பெரிய தந்தையா ராகிய இராமசாமிச் செட்டியாருக்குப் புதல்வராகக் கொடுக்கப் பெற்றவர் என்பதை முன்பே கூறி னோம். இவர், சென்னை உதவி ஷெரிபாகவும்,

சென்னை நகர மேயராகவும் விளங்கியவர். வெளி நாடுகளைச் சுற்றிப் பார்த்து உலகியலறிவு மிக்கவர்; கடல், தரை, வான் ஆகிய மூவழிகளிலும் ஏறக் குறைய 50 ஆயிரம் மைல் உலகப் பிரயாணம் செய்தவர் ; லண்டன் மாநகரில் ஓராண்டு இருந்து தொழிலறிவு பெற்றவர் ; பல வாணிகச் சங்கங்கள், பாங்கு (Bank) முதலியவற்றில் தொடர்பு கொண்டவர் ; நேர்மைக் குணம் உடையவர்.

## திரு. சிதம்பரஞ் செட்டியார்

இவர் அண்ணமலை அரசரின் மூன்ரும் புதல்வர். இப்போது சென்னை நகர மேயராக விளங்கிப் பல தொண்டுகள் செய்துவருகின்றவர் ; அறிவும், ஊக்கமும் மிக்கவர் ; வாணிகத்தை வளப்படுத்துவதில் வன்மை பெற்றவர் ; சுறுசுறுப்பும், கருதியது முடிக்கும் ஆற்றலும் உடையவர் ; கடமையிற் சிறிதும் தவருதவர் ; டென்னிஸ் விளையாட்டில் இந்தியாவில் புகழ்பெற்றவர்களில் இவரும் ஒருவர். இவர் பலமுறை வெளிநாடுகளைச் சுற்றிப்பார்த்து, ஆங்காங்குள்ள தொழில்முறை நுட்பங்களை அறிந்தவர். இந்தியாவிலுள்ள தொழிற்சாலைகள், பாங்கு, வர்த்தக சங்கங்கள் முதலியவைகளுள் பலவற்றில் இவருக்குத் தொடர்பு உண்டு. இவர், பொது நலப் பணிகளில் மிக்க ஆர்வமும், செய்வன திருந்தச் செய்யும் இயல்பும் உடையவர். இவர் இப்பொழுது சென்னைத் தமிழிசைச் சங்கச் செயலாளராய், அதன் வளர்ச்சியைக் கண்ணுங் கருத்துமாய்க் கவனித்து வருகிருர்.

## வாழ்த்து

நம் அண்ணுமலை அரசருடைய குடும்பத்தார், மேற்கூறியவாறு எல்லாச் சிறப்புக்களும் உடைய வர்களாய், நல்வாழ்வு வாழ்கின்ருர்கள் ; அண்ணு மலை வள்ளல் நிறுவிய பல்கலைக் கழகம் முதலிய அறநிலையங்களைப் போற்றி வளர்த்து வருகின் ருர்கள் ; இக் குடும்பத்தார், மேலும் மேலும் தழைத்து ஓங்கி நீடூழி வாழ்க.

---

